உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 37 ] காளயுக்தி ஆண்டு ஐப்பசித்திங்கள் 10—11—78 [ இதழ் 12

தருமையாதீனத்திற்குச் சொந்தமான

திருக்கடவூர்

ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானம்



கார்த்திகைச் சோமவார நாட்களில்

1008 சங்காபிஷேகம் கொண்டருளும் ஸ்ரீ அமிர்தகடேசுவரர்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

சேகரத்தி னுச்சியின்மேல்
செந்தேனுக் கிச்சித்தே
போகவசம் ஆகுமோ
போகாதார் — தாகம்
மிகஅறவே யுள்ளத்தில்
வேண்டிலுன்தாட் செந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா - 46


ஆசிரியர் :-

வித்துவான்

**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

**சி. அருணைவடிவேல் முதலியார்**


உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

## தருமையாதீனத் திங்கள் இதழ்


மலர் 37 || 10-11-78 || இதழ் 12


## உட்பொருள்

—★—

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 37 | காளயுக்தி – ஐப்பசி – 10—11—78 | இதழ் 12

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலி!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## "கந்தபுராணம் சிந்திப்போம்"

**அரிய வழிகாட்டிகள் :**

"சத்தியமே வெல்லும்; அதர்மம் வீழ்ச்சியுறும்" என்பதை நாம் அனுபவத்தில் கண்டுவருகிறோம். சில அரிய உண்மைகளை நீண்ட கதைகள் வாயிலாக உணர்த்துவது தமிழர் மரபு. அத்தகு பழைய வரலாறுகளைப் புராணம் என்று பெயரிட்டு வழங்குதல் தமிழில் வழக்கு. தமிழ் மொழியில் நூற்றுக்கணக்கான புராண நூல்கள் உண்டு. அவற்றுள் குறிக்கத்தக்கன மூன்று. அவை கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம் என்பன. முறையே இவற்றைச் சிவபெருமானின் நெற்றிக்கண், வலக்கண், இடக்கண் என வழங்குவர். ஆழ்ந்த நோக்கில்லாது நுனிப்புல் மேயும் போக்கு இன்று மக்களிடையே காணப்படுகிறது. புராணங்களை அரிய நீதி நூல்கள் என்றோ, நம் வாழ்வின் ஒருசார் படப்பிடிப்பு என்றோ உணராது அவற்றை வெறும் புனைகதைகள் என்று கருதும் போக்கு முறையாகாது. எதையும் நடைமுறை வாழ்வோடு ஒப்பிட்டுப்

னிக்கும் பழக்கம் நமக்கு ஏற்பட்டால், புராண இதிகாசங்கள் நம் வாழ்வின் அரிய வழிகாட்டிகளாகத் திகழ்வதை உணரமுடியும்.

**சில படிப்பினைகள் :**

கச்சியப்பர் வழங்கிய கந்தபுராணம் நமக்கு உணர்த்தும் நீதிகள் பல. பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன்னே வாழ்ந்திருந்த சூரன் என்ற கொடியோனை முருகன் வென்று ஆட்கொண்ட வரலாறு கந்த புராணம். பத்தாயிரம் பாடல்களில் நடைபோடும் கந்தபுராணம் இன்றும் புதுமை மாருது தமிழர்களால் போற்றப்பெறுவது பக்தி உணர்வினுல் மட்டுமன்று; அது வழங்கும் அரிய படிப்பினைகளும் நினைவுகூரப்படுவதால்தான். நூற்றுக்கணக்கான கிளைக்கதைகளோடு இடையிடும் இவ்வரியநூலில் நம் வாழ்வின் குறைநிறைகளை இணைத்துப்பார்க்கவேண்டும். அதிகாரவெறியால் ஆட்டம்போட்டவர்களின் பரிதாபகரமான வீழ்ச்சி, தீமைக்குத் துணைநின்றவர்கள் அதன்பயனை அனுபவிக்கும்நிலை, ஆணவத்தால் தலைகால் தெரியாது நின்ருேர் அடையும் துன்பம், பகைவனைச் சரியாக மதிப்பிடாது எளியவன் என்று கருதி இறுமாந்தார் இறுதியில் தோற்றல், அளவற்ற தவமிருந்தும் அகங்காரத்தால்வரும் தீமை, உண்மையான பக்தியால்வரும் உயர்வு, சத்தியத்தின் இறுதிவெற்றி, அதர்மத்தின்வீழ்ச்சி, அரசன் அன்றுகொல்வான் தெய்வம் நின்றுகொல்லும் என்று கந்தபுராணம் வழங்கும் படிப்பினைகள் இன்றும் நமக்கு அரணுகின்றன.

**செய்ந்நன்றி மறவாதே !**

பிரமதேவனின் மானசீகப் புதல்வன் தட்சன். அரிய தவங்களை இயற்றுகின்ருன். இறைவன் எதிர்வந்து தட்சனுக்கு அவன் வேண்டும் வரங்களை எல்லாம் வழங்குகின்ருன். அம்மையே அவன் மகளாகப் பிறக்கிருள். தவத்தால் அடக்கமும், செல்வத்தால் பணிவும் கொள்ளவேண்டிய தக்கன், ஆணவமும் அகங்காரமும் கொள்கிருன். யாரைக்குறையிரந்துநின்ருனே, யாரால்வாழ்வுபெற்ருனே அவரிடமே நன்றி மறந்து பகைகொள்கிருன். சிவபிரானை அவமதிக்கவேண்டும் என்பதற்காகவே ஓர் யாகம் நடத்துகின்ருன். கடைசியில் சிவபிரான் திருவுள்ளப்படி வீரபத்திரதேவர் தக்கனது தலையை வெட்டி யாகத் தீயில் இடுகின்ருர். பிரமன் வேண்டுகோள்படி மீண்டும் தக்கனுக்கு ஆட்டுத்தலை பொருத்தப்படுகிறது. இது கந்தபுராணம்கூறும் தட்சன் வரலாறு. இன்றும் நம்மிடையே தட்சர்கள் உண்டு. வறுமையுற்று வாடி, நல்லவன் ஒருவனைக் குறையிரந்து, அவனுல் வாழ்வுபெற்றபலர் எவன் தன் வாழ்வில் ஒளிவழங்கினுனே அவனையே பகைத்து, நன்றி மறந்து தீமைபுரிதலை இன்றும் காண்கின்ருேம். அவர்களின் முடிவு எப்படி அமையும் என்பதைத் தட்சன் வரலாறு பேசுகின்றது.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்ற குறளுக்கு இலக்கியமாக இருந்து நமக்கு எச்சரிக்கைசெய்கிறது தட்சன் வரலாறு கூறும் கந்தபுராணம்.

**தீமைக்குத் துணைபோகாதே!**

இன்றும் சமூகத்தில் தீயோர் சிலரே. நல்லோர் பலர். என்றாலும் நல்லோர் சிறுபான்மையினராகிய தீயோர்க்கு அஞ்சி அவர்களைச் சார்ந்துநின்று, போற்றி வாழ்வதனையே மேற்கொள்கின்றனர். தீமையைத் தீமை எனக் குறித்து, அஞ்சாது எதிர்நின்று போராட நன்மைக்குத் துணிவில்லை. எனவே, சிறுபான்மையாகிய தீமையே பெரும்பாலும் ஆதிக்கம்செலுத்துகின்றது. நன்மை உள்ளக் குமுறலோடு வாய்மூடி மௌனியாகவே இருந்துவிடுகிறது. தட்சனை அறிந்திருந்தும் அவன் செய்த முறைபற்ற யாகத்தை உணர்ந்திருந்தும், அவனுக்கு அஞ்சி, சிவபிரானுக்கு எதிராக அவன் நிகழ்த்திய வேள்வியில் கலந்துகொண்ட தேவர்களைக் கந்தபுராணம் அறிமுகப்படுத்துகின்றது. நல்லோர் தீயோர்க்குத் துணைபோனால் அதற்கும் தண்டனை உண்டல்லவா? பட்டமரத்தைச் சார்ந்துநின்ற பாவத்தால் காட்டுத் தீயில் பச்சை மரங்களும் பொசுங்குதல் உண்டே! தட்சனுக்குத் துணைபோன தேவர்கள் சூரபதுமன் முதலியோரால் படும் அளவிலாத் துன்பங்களை நாம் நினைவில்கொண்டுபார்த்தால் கந்தபுராணம் இன்றும் நமக்கு வற்றாத நீரூற்றாக வழங்கும் நீதிகளை நினைவுகூர்தல் முடியும். தீமையை எதிர்க்கத் துணிவுவேண்டும். அது இயலாது போனாலும் தீமைக்குத் துணைபோகாதுவாழும் திண்மையாவதுவேண்டும் என்பதனை இன்றைய சமுதாயம் உணர்ந்தால் எத்தனையோ துன்பங்கள் இல்லாது மறையும்.

**பகையை இகழாதே!**

சூரபதுமன் சிவபிரான் அருள்பெறப் பெரிய யாகம் நிகழ்த்துகின்றான். பல்லாயிரம் ஆண்டு தவம் முயல்கிறான். பெருமான் அருளால் ஆயிரத்தெட்டு அண்டங்களை, நூற்றெட்டு யுகம் ஆளும் வரம் பெறுகின்றான். அழியா வச்சிர யாக்கையும், நினைத்த இடத்திற்குச் செல்லும் இந்திரஞாலம் என்னும் தேரும் கிடைத்தன. ஆட்சிக்குவரும்வரை அரியமுயற்சியும் தவமும் இருந்தன. ஆட்சிக்கு வந்தபின் ஆணவமும் அறியாமையும் சூழ்கின்றன. சுக்கிராச்சாரி போன்ற தீயோர் தூபமிடுகின்றனர். தேவர்களைச் சின்னாபின்னப் படுத்துகின்றான். கொடுங்கோன்மை தலைவிரித்தாடுகிறது. சிவபிரான் அருளால் முருகப்பெருமான் திருவவதாரம் நிகழ்கிறது. சூரனின்

தம்பி தாரகனை அழித்து வீரமகேந்திரம் வரும் முருகனைப் பாலன் என்று கருதி இகழ்கின்றான் சூரன். தன் வீரம், தன் தவம், தன் பலம் என இவற்றையே வியந்து, எதிரியை இகழ்ச்சியாக எடைபோட்டு வீழ்கிறான் சூரன்.

" வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்"

என்ற அறிவில்லாது வீழ்ச்சியுறும் ஆட்சியாளர்களுக்குச் சூரபதுமனை விட பாடம் புகட்டும் வேறுபாத்திரம் எங்கும் இல்லை. வீழ்ச்சிவரும் போது ஆட்சியாளர்களுக்கு உடன்பிறந்தார், மக்கள், சுற்றத்தார், சான்றோர் கூறும் அறிவுரைகள் சிறிதும் ஏரு என்பதனைக் கந்த புராணவரலாறு, என்றும் மாறாத புதுமைப் பொலிவுடன் பேசிக் காட்டுதல் வியக்கத்தக்கது.

### துன்பத்தில் துவளாதே !

மற்றும்ஓர் அரியநுட்பம் இங்கேசிந்திக்கத்தக்கது. திருவருட்செயல் களை உள்ளவாறு உணரும் பக்குவம் வாய்த்தாலே கந்தபுராண நீதிகள் விளங்கும். ஐயோ ! இந்தக் கொடியவன் ஆட்சியில் இந்த நல்லவர் கள் துன்புறுகின்றார்களே என நாம் சிலநேரங்களில் வருந்தக்கூடும். சூரன் ஆட்சியில் தேவர்கள்படும்துயர் நமக்குக் கசிவினை உண்டாக்கு கின்றது. ஆனால் தேவர்கள் இன்று அனுபவிக்கும் துன்பம், அன்று அவர்கள் தட்சயாகத்தில் கலந்துகொண்ட குற்றத்திற்கு வழங்கப்படும் தண்டனை என்பதைக் கந்தபுராணம் உணர்த்தும் போதுதான் உண்மை விளங்குகிறது. இறைவனின் கருணைமிக்க ஆட்சியில் எந்தத் தண்டனை, யார்மூலம் வழங்கப்பெற்றாலும், அதனைக் கண்டு குறையுறாது, இது நாம் முன்பொருமுறை இம்மையிலோ அன்றி முற்பிறப்பிலோ செய்த பாவத்தின் ஊதியம் என உணர்ந்து அமைதி கொள்ளும் மனப்பாங்கினைப்பெற, கந்தபுராணம் அரியவழி காட்டு கின்றது. இவ்வாறு புராண வரலாறுகளை வெறும் கதைகளாகக்கண்டு புறக்கணிக்காது, நம் வாழ்விற்கு அவை வழங்கும் கொடைகளை இனங்கண்டு போற்றுதல் மக்கள் கடனாகும்.

### திருவருளை ஐயுறாதே !

சூரபதுமன் முதலியோரது ஆட்சியில் துயர் உற்ற தேவர்கள் சிவபிரானைக் குறையிரக்கின்றனர். பெருமான் முருகனைத் தோற்று விப்பதாக அருள்பாலிக்கின்றார். சனகாதிமுனிவர்களுக்கு உபதேசித்து யோகநிலையில் இருக்கும்சிவபிரானின் கருணையில் நம்பிக்கைஇல்லாத தேவர்கள் மன்மதனை ஏவி, சிவபிரானின் நிட்டையினைக் கலைக்க முயல்கின்றனர். மன்மதன் அழிகிறான். பின் உமையம்மை திருமணம்

நிகழ்கிறது. முருகன் திருவவதாரம் உலகவர் அச்சங்கொள்ள நெற்றிக் கண் தீப்பொறிகள் வாயிலாக அமைகிறது. உரிய காலத்தில் பால் நினைந்தூட்டும் தாயாக நின்று காக்கும் பரம்பொருளை ஐயுறும் நம் அறியாமைக்குக் கந்தபுராணம் வரலாற்றுச் சான்று காட்டுகின்றது. மன்மதன் இல்லாது நிகழும் மலைமகள் திருமணத்தின் வாயிலாக நம்மையொத்த ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டு, இச்சைமாத்திரத்திலே செயற்படும் சிவபரம்பொருளின் மேன்மை விளக்கப்படுகின்றது.

**நமது கடமை :**

சூரபதுமனை வென்று தேவர்கள் துயர்தீர்த்த கந்தசஷ்டி நாட்களில் கந்தபுராணம் ஓதுவதும் கேட்பதும் தமிழர் பழக்கம். பக்தி பூர்வமாகத் திருவருளை உணர்வதோடு, உலகியலோடு ஒப்பவைத்து கந்தபுராணம் போன்ற அரிய நூல்கள் வழங்கும் என்றும் மாறுத வாழ்வியல் உண்மைகளையும், படிப்பினைகளையும் அறிதல் நமது கடமையாகும். நமது தொன்மைமிக்க சைவ சமயமும் சைவ சமய அருள் நூல்களும், மனித வாழ்வின் மன மாசுகளை நீக்கி, அவர்களை வாழ்வாங்கு வாழவைக்கும் உயர்வுடையன என்பதனை உணர்தல் இன்றியமையாதது. கந்தபுராணம் போல ஏனைய அருள்நூல்களையும் இனங்கண்டு போற்றி வாழ்வாங்கு வாழ அருள்மிகு முருகப்பெருமான் திருவருள் துணை நிற்பதாக !

வாழிய பக்தர்கள்.

வளர்க கந்தபுராணச் சிந்தனை.

---

**கடிதம்**

T. Mahalingam, A. M. I. S. E., L. C. E.,
Assistant Executive Engineer,
Tamil Nadu Harijan Housing and
Development Corporation, Mayuram.

9, அப்பாபிள்ளைத் தெரு,
திருவாரூர்.

19—11—78.

*தங்கள் திருமடத்தின் நல்லாட்சிஓங்கி வளம் பெற சொக்கநாதப் பெருமானையும் ஆரூர் தியாகேசனையும் பிரார்த்திக்கிறேன். நான் தங்கள் திருமடத்தின் ஞானசம்பந்தம் இதழில் ஆயுள் சந்தாதாரன். அதில்வரும் கருத்துக்கள் சைவத்துக்கும் அதைச் சார்ந்த சைவப்பெரு மக்களுக்கும் பெரிதும் பயன்படுகின்றன. *

உ

குருபாதம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான கருங்குயில்நாதன்பேட்டை

ஸ்ரீ ஆனந்தவல்லி உடனுரிய

ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி தேவஸ்தானத்தில்

25—9—78 அன்று நடைபெற்ற மின்விளக்கேற்றுவிழாவில்

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

—★—

திருச்சிற்றம்பலம்

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

திருச்சிற்றம்பலம்

கல்வி கற்கும் மாணவர்களுக்குத் தொண்டு மனப்பான்மை வளர வேண்டும். இந்த நோக்கத்தோடு, சென்னைப் பல்கலைக் கழகம் பல கல்லூரிகளிலும் தேசிய சேவைத் திட்டப் பணியைத் தொடங்கியுள்ளது. இத்திட்டத்தின்கீழ்த் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் கல்லூரி, மாயூரத்திலுள்ள தருமபுரம் ஸ்ரீ ஞானம்பிகை அரசினர் மகளிர் கலைக் கல்லூரி மாணவ மாணவிகள் பல்வேறு சமூகப் பணிகளிலும் ஈடுபட்டுவருகின்றனர். மாயூரம் ஸ்ரீ ஞானம்பிகைக் கலைக் கல்லூரி மாணவிகள், பத்துநாட்களாக நமது மணக்குடிகிராமத்தில் முகாமிட்டு மருத்துவம் சுகாதாரம் முதலிய துறைகளில் பல்வேறு பணிகளைப் புரிந்து, இன்று தங்கள் பணிகளை இப்புனிதத்திருக்கோயிலில் நிறைவுசெய்துள்ளனர். அவர்களது சேவையுணர்வு பக்தியுணர்வோடுகலந்து வளர்வதைவாழ்த்தி, சில கருத்துக்களை உங்கள் சிந்தனைக்கு உரித்தாக்குகின்றோம்.

**மக்கள் சேவையே மகேசன் சேவை :**

மக்கள் சேவையே மகேசன் சேவை எனப் பலரும் பேசிவருகின்றனர். இத்தொடருக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம். ஒருபொருள், மக்களுக்குச் செய்யும் சேவையே மகேசனுக்குச் செய்யப்படும் சேவை என்பதாகும். பிறிதொருபொருள் மகேசனின் சேவையே மக்களுக்குச் செய்யும் சேவையாகத்தான் இருக்கிறது என்பது.

மக்களுக்குச் செய்யும் சேவையை மகேசன் தனக்குச் செய்யும் சேவையாக ஏற்று அருள்புரிகிறான் என்பதைத் திருமூலர் அருளிய,

" நடமாடுங் கோயில் நம்பற்கு ஒன்று ஈயின்
படமாடக் கோயில் பரமற்கு அங்கு ஆகும் "

என்ற திருப்பாடலால் நன்கு அறியலாம். இப்பாடலில் நடமாடும் கோயில்கள் எனக் குறிப்பிடப்படுவது யாரை எனின், நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும் மன்றாடும் மலர்ப்பாதம் மறவாமையே பொருள் எனக்கொண்டு, செஞ்சாந்தெறியினும் செத்தினும் போழினும் நெஞ்சோர்ந்தோடா நிலையினராகிய ஜீவன்முத்தர்களேயேயாகும்.

சாதாரண நிலையில் வாழும் மக்கட்குச்செய்யும் சேவைகளும் ஒரு வகையில் பசுபுண்ணியம் என்று கூறப்படும். நல்லன தீயனவற்றை உணர்ந்து நல்வழியில் வளரவேண்டும் என்ற எண்ணம் படைத்த மக்கட்குச் சேவை செய்வதையும் மகேசன் தன் சேவையாகவே ஏற்றுக்கொள்வான்.

**மகேசன் சேவையே மக்கள் சேவை :**

மகேசனே மக்கள் சேவைதான் செய்துவருகிறான். ஏன்? மக்கட்குமட்டுமா? தாவரம் முதல் தேவர்கள் ஈறாக எல்லா உயிர்கட்குமே யல்லவா சேவைசெய்து வருகிறான். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழிலுமே உயிர்கட்காக இறைவன்செய்யும் சேவையாகத்தானே அமைகிறது. மகேசனே தமது பெருங்கருணையினால் சேவை செய்யும்போது தகுதியும், திறமையும், கருணையும் மிக்கவர்கள் எளிய இனியவர்கட்குச் சேவைசெய்வதைப் பரமனே உவந்து ஏற்றுக்கொள்ளத்தான் செய்வார். எனவே தெய்வபக்தியோடும், நாட்டுப்பற்றோடும், சகோதர உணர்வோடும் மாணவ மாணவியர் சமூகசேவை செய்வது பாராட்டத்தக்கதாகும்.

இச்சேவைத்திட்டத்தில் மாணவர்கள் சிறுமை பெருமை பாராட்டாமல் உடலுழைப்புப்பணி செய்வதால் அவர்கட்குப் பண்பாடு வளர்கிறது. அதேநேரத்தில் கிராம சமுதாய மக்கட்கும் பேருதவி எளிதில் கிடைக்கிறது. இருதிறத்தாரையும் வாழ்த்துகிறோம்.

**மின்விளக்கு ஏற்று விழா :**

இன்று இத் திருக்கோயிலில் மின்விளக்கு ஏற்றப்பெற்றது. மக்கள் பலரும் வந்து வழிபாடு செய்தற்குரிய ஆலயங்கள் ஒளிமய மாகத் திகழ்ந்தால்தான் நம் நாடும் வீடும் ஒளிமயமாகத் திகழும்; விளக்கமும் அடையும். இப்பணி மாயூரம் கோட்டாட்சித் தலைவர்' திரு. சோனமுத்துக்கோன் அவர்களால் தொடங்கப்பெற்றது. அவர் தெய்வ பக்தியும் செயல் திறனும் பெற்ற நிர்வாகி. அவர்கள் தொடங் கியது மகிழ்வுதருகிறது.

இருள் அறியாமையைப் போன்றது. ஒளி அறிவைப்போன்றது. நம் உள்ளங்களில் அறியாமை அகன்று அறிவொளி பெருகவேண்டு மானால் அவரவரும் திருக்கோயில்களில் திருவிளக்கேற்றும் பணியைச் செய்தல்வேண்டும்.

" விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றியாகும்
துளக்கில்நல் மலர்தொடுத்தால் தூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதம்சொன் னார் அடிகள்தாம் அருளுமாறே "

என்று அருளிச்செய்கிறார் அப்பரடிகள். திருக்கோயில்களைத் திரு வலகிட்டுத் தூய்மை செய்யும் பணியைவிடத் திருமெழுக்கிடுதல் சிறந்த பயனைத்தரும்; நறுமலர்களை எடுத்துவந்து மாலையாகத் தொடுத்து அணிவித்தால் வானுலக இன்பங்களைப் பெறலாம்; திரு விளக்கு ஏற்றி வழிபட்டால் மெய்நெறியில் செல்லத்தக்க சிவஞானம் உண்டாகும்; இசைப்பாடல்களைப்பாடி வழிபடுவோமாயின் இறைவன் திருவருள் நமக்கு மிகுதியும் உண்டாகும் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

**எலியின் இறைபணி :**

திருமறைக்காடு எனப்படும் வேதாரண்யம் திருக்கோயிலில் எலி யொன்று வாழ்ந்துவந்தது. நள்ளிரவில் அர்த்தயாம பூசை முடித்து அர்ச்சகர் இல்லம்சென்று விட்டநேரத்தில் எலி தீபத்தில் இருந்த நெய்யைக் குடிப்பதற்கு முற்பட்டது. சுடர்தட்டி அணைய இருந்த விளக்கில் ஏறி நெய்யைக் குடிக்க ஆரம்பித்தது. விளக்கின் சுடர் எலியின் மூக்கைச் சுட்டுவிட்டது. சூடுபொறுக்காத நிலையில் தன் மூக்கைச் சிலிர்த்ததால் அணைய இருந்த தீபம் நன்கு தூண்டப்பட்டு எரியத் தொடங்கிற்று. இதைக்கண்ட இறைவன் எலியின்செயலுக்கு மகிழ்ந்தார். அணைய இருந்த விளக்கைத் தூண்டி எரிய விட்ட அவ்வெலிக்கு அரசனாகப் பிறக்கும் பெரும் பேற்றை வழங்கியருளினார் என்று அருளிச்செய்கிறார் அப்பர்.

" நிறைமறைக் காடுதன்னில் நீண்டெரி தீபந்தன்னைக்
கறைநிறத்து எலிதன்மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவான் உலகமெல்லாம்
குறைவறக் கொடுப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே "

என்பது அப்பர் அருளிய திருநேரிசைப்பாடல். அபுத்திபூர்வமாகச் (அறியாமலேயே) செய்யும் இத்தகைய தொண்டுகட்கே இத்தனை பெரிய சிறப்பை இறைவன் அருளுவானேயானால், புத்திபூர்வமாக (அறிந்து) செய்யும் தொண்டுகளுக்கு எத்தனை பெரிய நலங்களை இறைவன் அருளுவான் என்பதைச் சிந்தித்துத்தெளிதல்வேண்டும்.

**கருங்குயில்நாதன்பேட்டை :**

இத்தலம் இந்திரன் குயிலுருவாய்ப் பூசித்து அருள் பெற்ற சிறப்புடையது. செம்பொன்னார்கோயிலுக்கு அருகிலுள்ள பரசலூர் என வழங்கும் பறியலூரில்தான் தக்ஷன் சிவபெருமானைப் புறக்கணித்து யாகம் செய்தான். தக்ஷனின் அழைப்பை ஏற்றுத் திருமால் பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் அந்தயாகத்துக்கு அவியுணவு உண்ணுதற்பொருட்டு 'வந்திருந்தனர். சிவபிரானும் உமையம்மையும், வீரபத்திரரையும், மகாகாளியையும் ஏவினர். வீரபத்திரர் தட்சயாகத்திற்கு வந்திருந்த தேவர்களுக்குத் தக்க தண்டனைகள் வழங்கினர். அத்தண்டனைகளைப்பெற்ற இந்திரன் பயந்து குயிலுருவம் எடுத்து இத்தலத்திற்கு ஓடிவந்தான். தான் செய்த பாவத்தையும் பறவை உருவம் எடுத்துவர நேர்ந்ததையும் உணர்ந்து இத்தலத்தில் பாவ விமோசனம் பெறுதற்பொருட்டு, சக்திபுரீசுவரரைப் பூசித்து வழிபட்டான். இறைவன் இந்திரனுக்கு அருள்புரிந்தார். இந்திரன் கருங்குயில் வடிவமெடுத்துவந்து பூசித்துப் பேறுபெற்ற காரணத்தால் இத்தலம் கருங்குயில்நாதன்பேட்டை என்ருயிற்று. இந்திரன் மேகவாகனனுதலின் கரிய முகில்களுக்கு நாதன் என்றபொருளில் கருமுகில் நாதன்பேட்டை எனவும் இத்தலம் வழங்கப்படும். இங்குள்ள கருணு தீர்த்தம் குட்டம் முதலிய எல்லாநோய்களையும் போக்கவல்லது. கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் அருள்மிகு சக்திபுரீசுவரர் ஆனந்தவல்லி அம்மையுடன் தருமபுரத்திற்கு எதிரில் உள்ள காவிரித் துறைக்கு எழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருளுவார். மாயூரம் வட்டாரத்தில் உள்ள பலரும் அன்று தீர்த்தமாடி நலம்பல பெற்று வருகின்றனர்.

மாயூரம், மாயூரத்திற்கு அருகிலுள்ள திருஇந்தளூர், கழுக்காணி முட்டம்,ஆனந்ததாண்டவபுரம்,பசுபதிஅக்ரகாரம், கருங்குயில்நாதன் பேட்டை, தருமபுரம் ஆகிய ஏழு தலங்களும் பிராமி, மகேஸ்வரி,

கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி ஆகிய சப்த மாதர்கள் பூசித்த தலங்களாகும். அவ்வரிசையில் இத்தலம் வராகி பூசித்த சிறப்புடையது. சப்த மாதர் திருவுருவங்களும் இத்தலத்தில் உள்ளன. இத்தகைய பல்வகைச் சிறப்புக்களும் பாங்குறப்பெற்றுள்ள இத்தலம் நமது தருமை ஆதீனத் திருக்கோயில்கள் இருபத்தேழனுள் ஒன்ருய் இலங்கிவருகிறது.

இவ்வூர்க்குடிமக்கள் இக்காலத்திலும் இக்கோயில் நிலங்களின் குத்தகைகளைப்பாக்கியின்றி, பக்தியுணர்வோடு கோயிலுக்கு அளித்து நல்வாழ்வு வாழ்ந்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வூர்க் குடிமக்களும், இன்றைய வழிபாட்டைச் சிறப்புற நிகழ்த்திவைத்த மணக்குடி கிராமத்தலைவர் திரு. இரா. சோமசுந்தரம் உள்ளிட்ட அன்பர்களும் இத்திருக்கோயிலின் பெருமைகளை உணர்ந்து போற்றிவழிபட்டு எல்லாநலங்களும்பெற்றுஉய்வார்களாக. செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் அனைவர்க்கும் நலம்பல விளைவதாக.

வாழ்கசிரடியாரெல்லாம் !



அட்டைப்பட விளக்கம் :-

## சங்காபிஷேகச் சிறப்பு

சிவபெருமான் அபிஷேகப்பிரியர். அபிஷேகத்தில் சிறந்தது அமிர்தாபிஷேகம். அதனிலும் சிறந்தது சங்காபிஷேகம். திருக்கடவூரில் பெருமானே அமிர்தலிங்கமாக இருப்பதால் அவருக்குச் சங்காபிஷேகமேசிறந்தது. மூலிகை வகை, பழவகை, மண்வகை, உலோகவகை, மருந்துவகை முதலிய முந்நூறு பொருள்களுக்குமேல் சங்குதிரவியமாகச் சேர்த்து வேள்வியியற்றி பூர்ணாகுதியுடன் கார்த்திகைமாதச் சோமவாரந்தோறும் மாலை 7 மணி அளவில் சங்காபிஷேகம் கொள்கின்ருர் ஸ்ரீ அமிர்தகடேசுவரர். இந்த அபிஷேகம் சரபோஜி மகாராஜா தனது மகோதரவியாதி நீங்கச்செய்த தாகச் செவிவழிச்செய்தி. இந்தமுறையில் ஆயிரத்தெட்டு சங்காபிஷேகம் நடைபெறுவது அமிர்தலிங்கத்திற்கே உரிய தனிச் சிறப்பு.

# "தருபவன் ஒருவன் வேண்டும்"

'சித்தாந்தப் புலவர் மணி'

திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

" ஒருவனே டொருத்தி ஒன்றென்று உரைத்திடும் உலகம் எல்லாம்,
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே,
தருபவன் ஒருவன் வேண்டும்; தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னிநின்றே."

— சித்தியார்.

முன்னுரை:

மனிதனுக்கு எத்தனையோ பலவகையான உணர்ச்சிகள் உண்டு. அவைகளுள் இறையுணர்வும் ஒன்று. நம்மையும் அறியாமல் நமக்குள்ளே அஃது அமைந்து கிடக்கின்றது. கடவுள் இல்லை என்று சாதித்து வாதிப்பவர்களுக்கும் உள்ளேகூட, அவ்வுணர்வு அமைந்து கிடக்கத்தான் செய்கின்றது. ஆனால் அஃது அவர்கள்பால், எதிர் மறைமுறையில் (Perverted manner) செயற்படுகின்றது. கடவுளை இகழ்பவர்களுங்கூட, தாங்கள் பின்பற்றும் தலைவர்களைக் கடவுளைப் போலவே பாவித்து, ஒருவகையில் ஆர்வம்மிக வழிபாடு செய்து வருதலைக் காண்கின்றோம். புத்தர் பெருமான், கடவுளுண்மைபற்றி ஏதும் வற்புறுத்திக் கூறிற்றிலர். ஆயினும், அவருக்குப் பின்வந்த பௌத்தர்கள், அவரையே கடவுளாகக் கருதி, அவர்மீது கடவுள் தன்மைகளை ஏற்றி, அவரையே கடவுளாக வழிபடத் தலைப்பட்டனர். அவர்தம் திருவுருவங்களைக் கடவுளின் திருவுருவங்களைப் போலவே, நிற்றல் - இருத்தல் - கிடத்தல் ஆகிய பல்வேறு நிலைகளிலும் அமைத்து வழிபட்டு வருகின்றனர். 'ஜீவாத்மாவும் பரமாத்மாவும் தம்மின் வேறல்ல; இரண்டும் ஒன்றே' என்னும் கொள்கைகளையுடைய அதி சங்கரர் தாமும், மனிதகுலம் உய்ந்து ஈடேறுவதற்குக் கடவுள் உணர்வும் வழிபாடும் இன்றியமையாதன என்று கண்டு, தாமே அவற்றைக் கடைப்பிடித்து உலகுக்கு வழிகாட்டியருளினர். *

---

* "What is most curious is that a philosopher, such as SANKARA, the most decided monist and the upholder of Brahman, as a neuter, as the cause of all things, is reported to have been a worshipper of idols and to have been in them despit

நம்மை விட அறிவிலோ ஆற்றலிலோ செல்வத்திலோ பதவி யிலோ சிறந்துயர்ந்து திகழ்பவர்களைக் காணுங்காலெல்லாம், இயல் பாகவே நமக்கு ஒருவகை வியப்பும் உவப்பும் அச்சமும் அடக்கமும் ஏற்படுகின்றன. அவர்களைத் தொழுது வணங்கி, அவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற முயலுவது பொதுவான நல்லமனித இயல்பாகவே யாண்டும் காணப்படுகின்றது. இவ்வியல்பின் உணர்ச்சி யும் சிறப்பும் மிக்க நிலையே கடவுள் உணர்ச்சி எனலாம். நாம் நம்முடைய பலவகைக் குறைகளையும், சிறுமைகளையும் உணரத் தலைப்படுகின்றபோது, நம்மிலும் மேலான உயர்ந்த பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் உடைய பரம்பொருள் ஒன்று உண்டு என்று நாம் உணரப் பெறுகின்றோம். அத் தெளிந்த மன நிலையினைத் தான் இறையுணர்வு என்று குறிப்பிடுகிறோம்.

**இறைபுணர்வு :**

மனித வாழ்வில் சிலசில உணர்வுகள் நம்மிடையே சிலகாலம் வரையில் மறைந்து கிடந்து, பின்னர் வெளிப்பட்டு வளர்ந்து செயற் படுகின்றன. உதாரண்மாக, 'பால் உணர்வு' (Sex - Instinct) என்பதனைக் குறிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட வயதில், பருவத்தில் அஃது ஏற்பட்டே தீர்கின்றது. குழந்தைமை நிலைமையிலும், இளம் பிள்ளைமை வயதிலும் பால் உணர்வு பெரிதும் தோன்றுவதில்லை. அப்போது அதனை நாம் இழிவாகவும் அருவருப்பாகவுங்கூட நினைக் கின்றோம். ஆனால் காளைப்பருவம் அடையுங்கால், நம் மனப்பான்மை மாறுகின்றது. பாலுணர்வின் ஆற்றலை நாம் பாங்குற உணரப் பெறு கின்றோம். நாம் விரும்பினாலும் வெறுத்தாலும், உடன்பட்டாலும் மறுத்தாலும், எப்படியேனும் பாலுணர்ச்சி நம்மிடை அரும்பியே விடுகின்றது.

அதுபோலவே, ஒரு குறிப்பிட்ட நேரத்தில். ஏதேனும் ஒரு சூழ் நிலையில், நம் மனித வாழ்வில், எங்ஙனமேனும் நமக்குக் கடவுள் உணர்வு தோன்றிவிடுகின்றது முதலில் நாம் கடவுள் உணர்வின் அருமை பெருமைகளையும், அனுபவங்களையும் அவசியத்தினையும் உணராமல் இருந்த போதிலும், பின்னர் உணரவேண்டியவர்கள் ஆகிவிடுகின்றோம். அப்பொழுதுதான் நம்முடைய முன்னைய அறி யாமையும் பிழையும் விளங்குகின்றன. நமது பேதைமை நிலையினை

---

all their hideousness, symbols of the Deity, useful as he thought, for the ignorant, even though they have no eyes as yet to see what is hidden behind the idols, and what was the true meaning of them".

— F. Max Muller.

அறிந்துகொண்டு, பின்னர் நாமே நாணமுற்று வருந்துகின்றோம். இதனையே,

" கன்னிகை ஒருத்தி சிற்றின்பம் வேம்பெனினும்
கைக்கொள்வள் பக்குவத்தில் ;
கணவன்அருள் பெறின்முனே சொன்னவாறு என்னெனக்
கருதி நகை ஆவள்; அதுபோல்
சொன்னபடி கேட்கும் இந்தப் பேதைக்கு
நின்கருணை தோற்றின் சுகாரம்பம்ஆம்..."

எனத் தாயுமான சுவாமிகள் அழகுறக் குறிப்பிட்டருளியிருத்தல் காணலாம்.

**உடலமைப்பும், இறையுணர்வும் :**

இறையுணர்வு பெறுவதற்கு நாம் வேறு பிற சாதனங்களோ, சான்றுகளோ தேடவேண்டுவதில்லை. நம்முடைய உடம்பின் அமைப்பினை ஒரு சிறிது உன்னிப்பார்த்து உணர்ந்தாலுங்கூட, நமக்குக் கடவுளுணர்ச்சி ஏற்படுதல் திண்ணம்.

" நமது மனித உடம்பில் 600 தசை நார்கள், 1,000 மைல் நீளமுள்ள இரத்தக் குழாய்கள், 550 இரத்த நாளங்கள், 16 சதுர அடிப் பரப்புடைய மென்தோல், 15 லட்சம் வியர்வைக் கோளங்கள், மூச்சுப் பையில் தேன்கூடு போன்ற 70 கோடி கண்ணறைகள், $3\times10^{12}$ நரம்புச்செல்கள், 300 லட்சம் வெள்ளையணுக்கள் $18\times10^{13}$ சிவப்பணுக்கள், 2,50,000 தலைமயிர்கள் ஆகியவை உள்ளன. 70 ஆண்டுகளில் நமது இதயம் 250 கோடி தடவைகள் துடிக்கின்றது. 5,00,000 டன் இரத்தத்தை வெளியேற்றி உடம்பில் பரவச் செய்கின்றது. நாள்தோறும் 36 அவுன்சு அளவு உமிழ்நீர் சுரந்து விழுங்கப்படுகின்றது. 120 முதல் 240 அவுன்சு வரை வயிற்றிற் செறிநீர் ஊறி, உணவைச் செறிப்பித்துக் கிருமிகளைக் கொல்லுகின்றது. †

---

† " There are in the human body 600 muscles, 1000 miles of blood vessels, 550 arteries, 16 square feet of skin, 1½ million sweet glands, 700 million cells in honeycomb fashion in the lungs, $3\times10^{12}$ nerve cells 30 million white corpuscles, $18\times10^{31}$ red corpuseles, and 2,50,000 hairs on the head. In 70 years, the heart beats 2,500 million times and lifts 5,00,000 tons of blood. 3 Pints of saliva are swallowed daily and the stomach generates 5 to 10 ouarts of gastric juice daily which disgest the food and desteoys the germs". — Loins Leguen,

இது போன்ற எத்துணையோ பல வியத்தகு செயல்களை யெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது, நாம் கடவுள் உணர்ச்சி அடையப் பெறுதல் திண்ணம்.

**எமர்சன் :**

"கடவுள் ஒருவர் உண்டு என்பது, நம்மைச் சுற்றி நாடோறும் நடைபெறுகின்ற செயல்களை ஒருசிறிது உன்னிப்பார்த்தாலே நமக்குப் புலனாகும். நமக்கு மேற்பட்ட இயற்கைச் சட்டம் ஒன்று இயங்கிக் கொண்டிருக்கிறது. அதுதான் உலகநிகழ்ச்சிகளை உருவாக்கி ஒழுங்கு படுத்தி வருகின்றது. ஏதோ நம்மால்தான் எல்லாம் நடப்பதுபோலக் கருதிக் கொண்டு, நாம் மேற்கொள்ளும் முனைப்புமிக்க செயல்கள், ஒருவகையில் தேவையில்லாதனவும் பயனற்றனவுமேயாகும். எளிய இயல்பான ஆடம்பரமற்ற செயல்நிலையில்தான், நாம் வன்மையுடையவர்களாகின்றோம். செருக்கற்ற பணிவுடைமையினால்தான், நமக்குத் தெய்வீக நிலை கிடைக்கின்றது. நம்பிக்கையும் அன்புமே நம்முடைய ஏராளமான கவலைச் சுமைகளினின்று நம்மை விடுவித்து, நமக்கு நலம் விளைவிக்கின்றன. ஓ! என் அன்பிற் சிறந்த உடன்பிறப்பாளர்களே! கடவுள் இருக்கின்றார்."

"இயற்கைப் பொருள்களினுள்ளும், ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திற்கு மேலும், கடவுள் என்ற ஓர் உயிர்ப்பொருள் உலவி நிலவி வருகின்றது. அதுவே நம்மை இயக்கி நிற்கின்றது. உலக அமைப்பை, நாம் ஏதும் பிறழச்செய்துவிடாதபடி, அதுதான் கவனித்துக் கொள்ளுகின்றது. உலகப் பொருள்களிலெல்லாம், அது தன்னுடைய ஆற்றல் மிக்க கவர்ச்சித் திறனைப் பாய்ச்சி, ஊடுருவச் செய்துள்ளது. அதன் அறிவுரையை உடன்பட்டு ஒழுகும்போது, நாம் வளர்ச்சியும் செழிப்பும் அடைகின்றோம். அதன் சிற்றுயிர்களை நாம் வருந்த முற்படும்போது, அது நம் கைகளைப் பிணித்து விடுகின்றது. அல்லது நம்மையே தாக்குமாறு செய்கின்றது, உலகப் பொருள் அமைப்புகள், செயல்கள் யாவுமே கடவுள் ஒருவர் உண்டு என்று நமக்கு உணர்த்தி, நம்பிக்கைகொள்ளச் செய்யும் வகையிலேயே அமைந்திருக்கின்றன $" என்று, ரால்ஃப் வால்டோ எமர்சன் என்னும் அமெரிக்கநாட்டுப் பேரறிஞர் கூறுவதும், ஈண்டு நம்மனோர் அறிதற்கு உரியது.

---

$ "A little consideration of what takes place around us every day would show us that a higher law then that of our will, regulates events, that our painful labours are very unnecessary altogether fruitless, that only in our easy, simple, spontaneous action are we strong, and by contenting our-

**காந்தியடிகள்:**

" உலகம் எங்ஙனும் ஓர் ஒழுங்குமுறை நிலவுகின்றது. உலகில் உள்ள ஒவ்வொரு பொருளையும், உலகில் வாழ்கின்ற ஒவ்வோர் உயிரையும், மாற்ற முடியாத ஆற்றல் மிக்க ஒரு பெருஞ்சட்டம் ஆட்சி புரிந்து வருகின்றது. அஃது ஒரு குருட்டியற் சட்டம் அன்று. ஏனெனில், குருட்டியற் சட்டமாயின், உயிரும் அறிவும் உடைய பொருள்களின் இயக்கத்தை வரையறை செய்து நடத்த, அதனுல் இயலாது. எனவே, வாழ்வனைத்தையும் ஒரு வரையறைசெய்து நடத்துவிக்கும் அந்தச் சட்டம்தான் கடவுள். சட்டமும், சட்டத்தை வகுப்பவனும் ஒன்றே. நாம் அறிந்து கொள்ளாமை காரணமாகச் சட்டத்தினையோ, அதனை வகுத்தவனையோ இல்லை என்று சொல்லுவது பொருந்தாது. உலகில் நிலவும் அரசின் நெறியினை அறியாமையினுலோ, இல்லை என்று சொல்லுவதனுலோ, நமக்கு ஏதும் பயன் விளையாது. அதுபோலவே நாம் கடவுளை இல்லை என்பதனுல், நமக்கு அவர்தம் சட்டங்களினின்று விடுதலை ஏற்பட்டுவிடாது. அரசாங்கத்தின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடப்பதனுல், நம் வாழ்க்கை தொல்லைகள் இன்றி, எளியதும் இனியதுமாக அமையும். அங்ஙனமே கடவுளின் இயற்கைச் சட்ட திட்ட நெறிமுறைகளுக்கும் நாம் கட்டுப்பட்டு ஒழுகினுல் நம்முடைய வாழ்க்கைப்பயணம் எளிமையும் இன்பமும் நிறைந்ததாக அமைந்துவிடும் " ‡ எனக் காந்தியடிகள் அறிவுறுத்துகின்ருர்.

---

selves with obedience we become divine. Belief and love will relieve us of a vast load of care. O! My brothers! God exists.

There is a soul at the centre of nature and over the will of every man, so that none of us can wrong the universe. It has so infused its strong enchantment into nature that we prosper when we accept its advice: and when we struggle to wound its creatures, our hands are glad to our sides, or they beat our own breasts. The whole course of things goes to teach us faith."

— Ralph Waldo Emerson.

‡ "There is orderliness in the Universe there is an unalterable Law governing everything and every being that exists or lives. It is not a blind law; for no blind law can govern the conduct of living beings. The law, then which governs all life is God Law and the Law-Giver are one.

**முடிவுரை :**

இங்ஙனம் சான்றோர்கள்எல்லோருமே ஒருமுகமாகக் கட்டுரைத்து வற்புறுத்தி அறிவுறுத்தியருளுதலைக் காண்கின்றோம். ஆதலின், நாம் அனைவரும் இறையுணர்வு உடையவர்களாகத் தூய வாழ்க்கை வாழ்ந்து, நலம்பெற முயலுவோமாக.

---

I may not deny theL aw or the Law-Giver because I know so little about it or Him Just as my denial or ignorance of the exirtence of an easthly power avail me nothing, even so my denial or God and His law will not liberate me from its operation. Whereas humble and mute acceptance of divine authority makes life's journey easier even as the acceptance of earthly rules makes life under it easier ".

— Mahathma Gandhi.



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை
தமிழ்நாடு அரசு உள்ளாட்சித்துறை அமைச்சர் மாண்புமிகு. காளிமுத்து அவர்களும்
சட்டமன்ற உறுப்பினர் திரு. பாலகுரு அவர்களும்
தரிசித்தபோது பொன்னுடை போர்த்தி ஆசியருளியது.
3—11—1978

உ

சிவமயம்

# ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

திருவாவடுதுறை ஆதீனம் இருபத்தாறுவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** தமது குருமூர்த்திகள் காட்டியருளிய வழியிலேயே தமது ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாளில் பாடல்பெற்ற தலங்கள் தோறும் முறையான வழிபாட்டிற்கு வழிகாட்டி வருகின்றார்கள். காவிரித் தென்கரைத்தலங்களில் ஆயில்யத்திருநாள் வழிபாடு நடைபெறுகிறது. உழவாரப்பணி, விசேட அபிடேக ஆராதனைகள், தலத்திருப்பதிகங்களை அச்சிட்டு ஓதி வழங்குதல், சமயப்பிரசாரம் முதலியன ஆயில்யத்திருநாள் வழிபாட்டின் அங்கங்களாகும்.

நிகழும் **காளயுக்தி ஆண்டு மார்கழித்திங்கள் 4-ஆம் நாள் (19—12—1978) செவ்வாய்க்கிழமை காலை 9-மணி அளவில் திருப்பழையாறை, வடதளி அருள்மிகு சோமேசர் ஆலயத்திலும் மாலை 6-மணி அளவில் திருவலஞ்சுழி அருள்மிகு கபர்த்தீசர் ஆலயத்திலும்** விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் ஆயில்யத் திருநாள் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

அன்பர்கள் அனைவரும் வருக! வழிபட்டு உய்க! அரன் அருள் பெறுக.

---

**குறிப்பு:-** காலை 8-மணி அளவில் தொடங்கி அன்பர்கள் பலரும் உழவாரத்திருப்பணிபுரிவர். அன்பர்கள் வழிபாட்டிற்கு உரிய பால் இளநீர் முதலிய அபிஷேகத் திரவியங்கள் கொண்டு வரலாம்.

# திருநல்லூர், திருஆவூர்ப்பசுபதீச்சரத் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப் புலவர்,

**வித்துவான். திரு. வீ. சா. குருசாமிதேசிகர் எம். ஏ.**

சோழவளநாடு புலவர்கள் பலராலும் போற்றிப் புகழப்பெறும் திருநாடு. பூக்களில் தாமரைபோலவும், புருடருள் திருமால்போலவும், காவினுள் கற்பகம்போலவும், கலைகளில் ஞானம்போலவும், பசுக்களில் காமதேனுபோலவும், அறத்தினில் இல்லறம்போலவும், நாக்களில் உண்மைபேசும் நாப்போலவும் நாடுகளில் சிறந்துவிளங்குவது சோழ நாடு என மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இந் நாட்டினைப் பாராட்டிப் பாடுவார்.

சோழநாட்டின் சிறப்புக்களுக்கெல்லாம் காரணமாக விளங்குவது காவிரி. இந்நதியின் இருகரைமருங்கிலும் விளங்கும் எண்ணற்ற சிவாலயங்கள் சோழநாட்டைத் தெய்வமணம் கமழச்செய்கின்றன. அத்தகைய ஆலயங்கள் பலவற்றுள் திருநல்லூரும், திருஆவூர்ப் பசுபதீச்சரமும் கோச்செங்கட்சோழனால் கட்டப்பெற்ற மாடக்கோயில் களாய் விளங்குவன. தேவாரப் பாடல்பெற்ற காவிரித் தென்கரைத் தலங்களில் 20, 21 ஆவது திருத்தலங்களாக இவை எண்ணப்பெறு கின்றன. தலபுராண வரலாற்றில் இவ்விருதலங்களில் உள்ள மலை களும் திருக்கயிலாய மலையிலிருந்து வாயுதேவனால் கொண்டுவரப் பட்டவை என்று கூறப்படுகிறது.

## திருநல்லூர்

திருநல்லூர் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன அருளாட்சியில் விளங்கித்திகழும் திருத்தலம். இறைவன் திருநாவுக் கரசு சுவாமிகளுக்குத் திருவடிசூட்டியருளியதும், அமர்நீதி நாயனாரை ஆட்கொண்டருளியதுமாகிய குறிப்பிடத்தக்க பல சிறப்புக்கள் இத் தலத்திற்குள்ளன.

**இருப்பிடம் :**

இத்திருத்தலம் கும்பகோணம் - தஞ்சாவூர் இருப்புப்பாதையில் சுந்தரப்பெருமாள்கோயில் புகைவண்டி நிலையத்திலிருந்து தென் மேற்கே மூன்றுகிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்துவழியே,

இத்தலத்தை அடைவதற்குரிய எளியவழியாகும். கும்பகோணம் - தஞ்சாவூர் பேருந்துவழியில் வாழைப்பழக்கடை என்னும் இடத்தில் இறங்கித் தென்மேற்கே 1 கி. மீட்டர் தூரம் சென்ருல் திருக்கோயிலை அடையலாம். இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிய மூன்று பதிகங்களும், திருநாவுக்கரசர் அருளிய இரண்டு பதிகங்களும் ஆக ஐந்து திருப்பதிகங்கள் உள்ளன.

**தலப்பெருமை :**

ஒருகாலத்தில் ஆதிசேடனுக்கும், வாயுதேவனுக்கும் நமக்குள் யார் வலிமிக்கவர் என்ற வலிமைப்போட்டி நிகழ்ந்தது. ஆதிசேடன் கயிலைமலையைத் தனது ஆயிரம் பணமகுடங்களாலும் (தலைகளாலும்) இறுகப் பற்றிக்கொண்டார். வாயுதேவன் சண்டமாருதமாக மலையை அசைக்க முற்பட்டான். தேவர்கள் அஞ்சினர். ஆதிசேடன் சிறிது பிடியைத் தளர்த்தியபோது வாயுதேவன் கயிலைமலைச் சிகரங்கள் இரண்டைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு தென்னுடுவந்து ஒன்றை நல்லூரிலும், பிறிதொன்றை ஆவூரிலும் விடுத்தனன். அம்மலைச் சிகரங்களின் ஒன்றே திருநல்லூரில் இறைவன் எழுந்தருளிய மலையாகும். இத்தலத்தில் உள்ள மலைக்குச் சுந்தரகிரி என்றும், ஆவூர் மலைச் சிகரத்திற்கு மணிகூடகிரி என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இத்திருத்தலத்தில் விளங்கும் மூலலிங்கப்பெருமான் பொன்மயமான ஒளியோடு திகழ்கின்ருர். ஆறுநாழிகைக்குஒருமுறை நிறம்மாறி ஐந்து வண்ணங்களோடு தோன்றும் இச்சிவலிங்கப் பெருமானுக்குப் பஞ்சவர்ணேசுவரர் என்று பெயர். பிருங்கிமுனிவர் வண்டுருவத்தோடு வழிபட்ட காரணத்திஞல் உண்டான துளைகள் பாணத்தில் உள்ளன. கவசம்போட்டுத்தான் இங்கு அபிஷேகம் செய்யப்படுகின்றது. பழச்சாறுகளின் அபிஷேகம் இந்த மூர்த்திக்கு மிக உகந்ததாகும்.

அகத்தியமாமுனிவர்க்கு இறைவன் திருமணக்கோலம் காட்டியருளியதலம். மூலத்தானத்திற்குப் பின்புறம் இறைவன் சுதையுருவில் மணவாளகோலத்தோடு விளங்குவதையும், இருபுறங்களிலும் பிரமன் திருமால் ஆகியோர் வழிபடுவதையும், ஒருபக்கத்தில் அகத்தியர் தரிசிப்பதையும் காணலாம். அகத்தியருக்குத் திருமணக்கோலம்காட்டியருளிய மூர்த்தி ஆதலின் இறைவன் கல்யாணசுந்தரேசுவரர் எனவும், இறைவி கிரிசுந்தரி எனவும் வழங்கப்படுகின்றனர். அகத்தியருக்குக் கயிலையில் விளங்கும் திருமணக்கோலத்தைக் காட்டியருளியதாலும் வாயுதேவனுல் கயிலையிலிருந்து கொண்டுவரப்பட்ட சிகரமாக இருத்தலாலும் இத்தலத்தைக் கயிலைக்கு நிகரானதாகக் கூறுவர். அப்பர் சுவாமிகளும் தாம்பாடிய திருவிருத்தப் பதிகத்தில் " வடபாற் கயிலையும் தென்பால் நல்லூரும் தம்வாழ்பதியே " எனக்.குறித்தருளினுர்.

தேவர்களும், முனிவர்களும், குந்திதேவி தருமசேனன் முதலானோர்களும் பூசித்து விரும்பியபேறுகளைப் பெற்றுள்ளனர். முசுகுந்த சோழமன்னன் இந்திரனிடமிருந்து தியாகராஜப்பெருமானைப்பெற்றுத் திருவாரூர் செல்லும்போது இத்தலத்தில் தியாகேசப்பெருமானை மூன்று நாட்கள் எழுந்தருளுவித்துப் பூசித்து வழிபாடாற்றினான்.

**கோயிலமைப்பு :**

இயற்கை வளங்கள் பலவும் செழுமிய கிராமமாக நல்லூர் விளங்குகிறது. ஊரின் நடுவே கிழக்குநோக்கிய மாடக்கோயிலாக ஆலயம் விளங்குகிறது. எதிரே பெரிய திருக்குளம் உள்ளது.

ஐந்து நிலைகளோடு கூடிய இராஜகோபுரத்தைக்கடந்து திருக்கோயிலுக்குள் நுழைந்ததும் மூன்றும் பிராகாரத்தை அடைகிறோம். சுவாமிசந்நிதியில் காக்கும் விநாயகர், கொடிமரம், நந்தி, பலிபீடங்கள் உள்ளன. அதையடுத்து வடபுறம் வசந்தமண்டபமும், தென்புறம் அமர்நீதிநாயனர் குடும்பத்தை இறைவன் தான் அளித்த கோவணத்திற்கு ஈடாகத் துலாவில் ஏற்றிய துலா மண்டபமும் உள்ளன.

வலமாக வலம்வரும்போது தெற்குப்பிராகாரத்தில் வடக்குநோக்கி விளங்கும் புகழ்பெற்ற அருள்மிகு காளியம்மை திருக்கோயிலைத் தரிசிக்கலாம். எட்டுத் திருக்கரங்களோடு விளங்கும் இக்காளியம்மை இத்தலத்தின் காவல் தெய்வமாகப் பிரசித்திபெற்று விளங்குகிறது.

மேலைப் பிராகாரத்தில் இராஜகோபுரம் ஒன்று விளங்குகிறது. வெளியில் கணநாதர் என்று வழங்கப்படும் பலிபீடம் திகழ்கிறது. ஆண்டுக்கு ஒருநாள் இவ்வூர்மக்கள் மிக்க பக்திசிரத்தையோடு அபிஷேக ஆராதனைகள்செய்து வழிபட்டுவருகின்றனர். வடகிழக்கில் யாகசாலையும், அதையடுத்து விசுவநாதர் திருக்கோயிலும் உள்ளன.

இரண்டாம் கோபுரம் மூன்று நிலைகளை உடையது. நாம் திருக்கோபுரவாயில்வழியாக ஆலயத்துக்குள் நுழைகின்றோம். நுழைவாயிலில் நுண்ணியவேலைப்பாடுகளோடுகூடிய அருள்மிகு காசிவிநாயகர் விளங்குகிறார். இரண்டாம் பிராகாரத்தை வலம்வரலாம். மேற்குப் பிராகாரத்தில் சோமாஸ்கந்தர் மண்டபம் உள்ளது. அதையடுத்துள்ள மண்டபத்தில் முருகப்பெருமான் விளங்குகிறார். தென்மேற்குமூலையில் சப்தசக்திகளின் திருவுருவங்கள் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் விளங்கும் அமர்நீதிநாயனாரின் பெரிய திருவுருவம் தரிசிக்கத்தக்கது. தலபுராணத்தோடு தொடர்புடைய சிற்பங்கள் பலவும் இங்குள்ளன. அமர்நீதி நாயனர், அவர் மனைவி, குழந்தை, குந்திதேவி முதலியோர் உருவங்கள் உள்ளன.

மாடக்கோயிலின் கோஷ்டங்களில் விநாயகர், வல்லபைவிநாயகர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர், பிர்மா, துர்க்கை ஆகியோர் திருவுருவங்கள் உள்ளன. வடக்குப்பிராகாரத்தில் சண்டேசுரர் கோயில் தனியே உள்ளது. நடராசசபையில் நடராசர் விளங்குகிறார்.

வலம்வந்து தெற்குப்பிராகாரத்தில் உள்ள படிக்கட்டுக்களின் வழியாக மலைமீது ஏறுகின்றோம். மலைமேல் சுவாமி அம்பாள் விளங்கு கின்றனர். சுவாமி சந்நிதி கிழக்குநோக்கி உள்ளது. சந்நிதியில் பலகணி உள்ளது. சந்நிதியில் துவாரபாலகர்களுக்குப் பதிலாக இரண்டு பலிபீடங்கள் உள்ளன.

இங்குள்ள இறைவரின் திருவுருவம் வேறெங்கும் காண இயலாத சிறப்பு அமைப்புக்களை உடையது. சதுரவடிவில் ஆவுடையார் பெரியதும் சிறியதுமான இரண்டு பாணங்கள். பெரியபாணமே மூல லிங்கம். ஆறுநாழிகைகட்கு ஒருமுறை மாறிமாறி ஐந்து வண்ணங் களில் காட்சிதரும் இம்மூலலிங்கம், வண்டு உருவமாய்ப் பிருங்கி முனிவர் வழிபட்டதால் ஏற்பட்ட துளைகளோடும் பொன்மயமான ஒளியோடும் திகழ்கிறது. சிறியபாணம், அகத்தியர் பிரதிட்டைசெய்து வழிபட்டதாகும். மூல இலிங்கத்திற்குப்பின்னால் இறைவன் சுதை யுருவில் மணவாளகோலத்தோடு காட்சியளிக்கின்றார். இருபுறமும் நான்முகனும் திருமாலும் உள்ளனர். அகத்தியர், வழிபடும்நிலையில் அருகில் நிற்கிறார். இறைவன் அப்பரடிகளுக்குத் திருவடி சூட்டிய தலமாதலின் இங்குத் திருமால் கோயில்களிற்போல வழிபாடுசெய்ய வருவோர்க்கு இறைவன் திருவடிகளைத் தலையில் சூட்டித் திருநீற்றுப் பிரசாதம் வழங்கப்படுகிறது.

அருள்மிகு கிரிசுந்தரி தெற்குநோக்கி விளங்குகின்றார். திருப் பள்ளியறை மலைமேல் உள்ளது. விலையுயர்ந்த கோயிற்பொருள்களைப் பாதுகாக்கும் சுரங்கம் ஒன்று இருந்தது. அது அடைக்கப்பட்டுள்ளது.

### அப்பரடிகளுக்கு இறைவன் திருவடி சூட்டியருளியது :

இத்தலத்திற்குப் பெருமை சேர்ப்பது இவ்வற்புத வரலாறு. திரு நாவுக்கரசர் சோழநாட்டுத் திருத்தலங்கள் பலவற்றையும் வணங்கிக் கொண்டு திருச்சத்திமுற்றத்தைச் சென்றடைந்தார். சிவக்கொழுந் தீசரை வழிபட்டுத் திருவடி தீட்சை புரிந்தருளுமாறு வேண்டிக் "கோவாய்முடுகி" என்ற திருப்பதிகம்பாடினார். "கூற்றம் குமைப் பதன்முன் பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்தருள்க" என வேண்டிய வேண்டுகோளைச் செவிமடுத்த இறைவன், நல்லூருக்கு வருமாறு பணித்தருளினர். அவ்வாறே அப்பர்சுவாமிகள் நல்லூரை அடைந்து இறைவரைவணங்கி எழுந்தார். அப்போது சிவபெருமான்

உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்று அப்பரடிகளின் சென்னிமிசைப் பாதமலர் சூட்டியருளினர். அப்பரடிகள் இறைவரது பெருங்கருணையை வியந்து "நினைந்துருகும் அடியாரை" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடிப் பரவினர். இப்பதிகப்பாடல்களில் இறைவன் திருவடி சூட்டிய அற்புதத்தை வியந்து போற்றினர். இவ்வருள் நிகழ்ச்சியை, "நற்றவன் நல்லூர்ச்சிவன் திருப்பாதம்தன் சென்னிவைக்கப் பெற்றவன்" எனத் திருத்தொண்டர் திருவந்தாதியுள் நம்பியாண்டார்நம்பிகள் குறித்துள்ளார்.

**அமர்நீதி நாயனர் :**

"அல்லிமென்முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்" என்று சுந்தரரால் போற்றப்பெறும் இந்நாயனர், சோழநாட்டில் திருநல்லூருக்குக் கிழக்கே உள்ள பழையாறை என்னும் நகரில் வணிகர்குலத்தில் தோன்றியவர். சிவனடியார்களுக்குக் கீளும்கோவணமும் கொடுக்கும் தொண்டினைமேற்கொண்டு, திருநல்லூரில் திருமடங்கட்டி, திருவிழாக் காலங்களில் அடியார்களுக்கு அமுதுசெய்வித்துவந்தார்.

ஒருநாள் சிவபெருமான் அந்தணர்குலத்துப் பிரமசாரியாகக் கோலங்கொண்டுவந்து ஒருதண்டில் முடிந்துவைத்திருந்த கோவணங்கள் இரண்டில் ஒன்றை அமர்நீதியாரிடம் கொடுத்துப் பத்திரமாக வைத்திருக்குமாறு கூறிக் காவிரிக்கு நீராடச்சென்றார். பெருமழை பெய்தது. சிறிதுநேரம்பொறுத்துத் திரும்பிவந்த பெருமான் அமர்நீதியாரிடம், கொடுத்த கோவணத்தைக் கேட்டார் இறைவன்தந்த கோவணத்தைக் காணவில்லை. அமர்நீதியார் வேறு புதியகோவணம் தருவதாகக் கூறினர். இறைவர் மறுத்தார். கெட்டுப்போனகோவணத்துக்கீடாகப் பட்டாடைகள் மணிகள் முதலியன தருவதாக அமர்நீதியார் கூறினர். இறைவன் இசைந்து துலாக்கோல்கொண்டுவரச்செய்து ஒரு தட்டில் தன்னிடமிருந்த ஈரமான கோவணத்தைவைக்க அதற்கு ஈடாகத் தம்மிடமுள்ள செல்வங்கள்யாவற்றையும் வைப்பினும் துலாக்கோல் நேர்நில்லாமையைக்கண்டு நாயனர் தம் புதல்வன் மனைவி முதலானுரோடு தாமும் ஏறினர். தட்டுச்சமமாகியது. நல்லூரிறைவன் அமர்நீதியாருக்கு அருட்காட்சி வழங்கினர். துலாத்தட்டே விமானமாகியது. அமர்நீதியார் தம்குடும்பத்தோடு சிவலோகம்சென்று இறைவன் திருவடிக்கீழ் இன்புற்றிருந்தார். இதனை அப்பர் சுவாமிகள் இத்தலத் திருவிருத்தப்பதிகத்துள் குறிப்பிட்டருள்கின்றார்.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு பெரியாண்டேசுவரர். கல்யாணசுந்தரேசுவரர், பஞ்சவர்ணேசுவரர் என்ற திருப்பெயர்களாலும் வழங்கப்பெறுகிறார். அம்பிகையின் திருப்பெயர் அருள்மிகு கிரிசுந்தரி. பர்வதசுந்தரி எனவும், கல்யாணசுந்தரி எனவும் வழங்கப்படுகிறாள்.

**தீர்த்தம் :**

சப்தசாகரம். இது திருக்கோயிலின்முன்னுல் உள்ளது. ஒரு மண்டலம் இங்குள்ள பன்னிரண்டுபடித்துறைகளிலும் நீராடி, சுவாமி யைப் பன்னிரண்டுமுறை வலம்வருவோர் உடற்பிணிகள் பலவும் நீங்கப்பெறுவதோடு உயிர்ப்பிணியும் அகலப்பெறுவர்.

பாண்டவர்களின் தாயாகிய குந்திதேவி கன்னிப்பருவத்தில் கர்ணனைப் பெற்றுப் பெட்டியில்வைத்து ஆற்றில்விட்ட பாவத்திற்குப் பிராயச்சித்தமாகத் தவுமியமுனிவரின் சொற்படி இத்திருத்தலத்தை அடைந்து உரோமச முனிவரைக்கண்டு தன்பாவத்திற்குரிய கழுவா யைக்கூறுமாறு கேட்டுக்கொண்டாள். முனிவர் குந்திதேவியைநோக்கி நாளை மாசிமகம்; சப்தசமுத்திரஸ்நானம்செய் எனக்கூறினுர். நாளைக் குள் எப்படிச்சென்று ஏழுகடல்களில் நீராடமுடியும் என்று வருந்தி இறைவனை வேண்டவே, இறைவன் பிரமதீர்த்தத்தில் ஏழுகடல்களை யும் வருவித்து அதில் நீராடுமாறு அருள்புரிந்தார். குந்திதேவியும் அவ்வாறே பிரம தீர்த்தத்தை ஏழுகடல்களாகப்பாவித்து நீராடி வழி பட்டுத் தன்பாவம்தீரப்பெற்ருள். சப்தசாகரதீர்த்தம் என்ற பெயருக்கு ஏற்ப இத்தீர்த்தத்தில் கிடைக்கப்பெற்ற சங்கு இன்றும் இக்கோயில் பூஜையில் இருந்துவருகிறது. தலவிருக்ஷம் - வில்வம்.

**தலபுராணம் :**

கமலை வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பட்ட திருநல்லூர்ப் புராணத்தை உரைநடைப்படுத்தச்செய்து திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தொடர்பான இருபத்துமூன்று கல்வெட்டுக்கள் படி யெடுக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் இருபத்திரண்டு கல்வெட்டுக்கள் சோழர்களுடையவை. முதல் இராசராசன்காலத்தில் நாராயணன் ஏகவீரன் என்பான் ஒருமண்டபம் கட்டியுள்ளான். அவன்காலத்தில் திருநல்லூர் பஞ்சவன்மாதேவி சதுர்வேதிமங்கலம் என்ற பெயருடன் விளங்கிற்று. அகோரவீரன் என்பவன் இக்கோயிலுக்கு நிலதானம் வழங்கியுள்ளான்.

## திருஆவூர்ப்பசுபதீச்சரம்

இத்திருத்தலம் தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம் தாலூகாவில் விளங்குவது. கும்பகோணத்திலிருந்து இத்தலத்திற்குச்செல்லபேருந்து வசதிகள் நிரம்பவுள்ளன.

கும்பகோணம் மன்னார்குடி பேருந்து வழியில் வலங்கைமானி லிருந்து மேற்கே கோவந்தகுடி வழியாக இத்தலத்தை அடையலாம். பாபநாசம் புகைவண்டி நிலயத்திலிருந்தும் வலங்கைமானிலிருந்தும் பேருந்துகள்மூலம் கோவந்தகுடிவந்து அங்கிருந்து இத்தலத்தை அடையலாம்.

ஆவூர் - ஊர்ப்பெயர். பசுபதீச்சரம் - கோயிற்பெயர். இத்திருத் தலம் மாடக்கோயிலாக விளங்குவது. காமதேனுவாகிய தெய்வப்பசு வழிபட்ட தலமாதலின் இப்பெயர் அமைந்தது. இதற்கு அடையாள மாக உட்கோயிலுக்கு ஏறிச்செல்லும் படிகளிலும் கொடிமரத்திலும் பசு சிவலிங்கத்தில் பால்சொரிந்து வழிபடும் சிற்பங்கள் அமைந்துள்ளன. இவ்வூருக்கு அசுவத்தவனம் என்றும், இறைவன் விளங்கும் விமானம் அழகிய மலை உச்சியைக்கொண்டுள்ளதால் மணிகூடம் என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. இவ்வூருக்கு அண்மையிலுள்ள கோவந்தகுடி காமதேனு நிலவுலகிற்குவந்த இடம் என்று கூறுவர்.

திருக்கயிலாய மலையிலிருந்து வாயுதேவனால் கொண்டுவரப்பட்ட இரண்டு மலைத்துண்டுகளில் ஒன்று நல்லூரிலும், ஒன்று இவ்வூரிலும் தங்கியதாகக் கூறப்படுகிறது.

**மூர்த்திகள் :**

இத்தலத்தில் தென்மேற்குத் திசையில் விளங்குகின்ற விநாயகர் நிருதிவிநாயகர் எனப்பெறுவர். முருகன் வில்லேந்தியவேலனாகக் காட்சிதருகிறார். சுவாமிபெயர் பசுபதீசுவரர். சுயம்புமூர்த்தி. காம தேனுவாகிய பசுவுக்கும் உயிர்களாகிய பசுவுக்கும் தலைவர் ஆதலின் இறைவர் பசுபதீசுவரர் என வழங்கப்பெறுகிறார். பெருமானுக்கு அசுவத்தவனநாதர், ஆவூர் உடையார், பசுபதீசுவரமுடையார் என் னும் பெயர்களும் வழங்கப்பெறுகின்றன. இக்கோயிலில் இரண்டு அம்பாள் சந்நிதிகள் உள்ளன. ஒன்று அருள்மிகு மங்களாம்பிகை சந்நிதி. இம்மூர்த்தி திருக்குளத்திலிருந்து எடுக்கப்பெற்றுப் பிரதிட்டை செய்யப்பெற்றதாகச் செவிவழிச்செய்தி வழங்குகிறது. பிறிதொன்று அருள்மிகு பங்கஜவல்லி சந்நிதி. இதுவே பழமையான அம்பாள் சந்நிதியாகும். 'பங்கயமங்கை விரும்பும் ஆவூர்' என்று தேவாரத்தில் இவ்வம்மை குறிக்கப்படுகிறார். மங்களாம்பிகை சந்நிதியே எல்லோ ராலும் போற்றப்படுகிறது.

தலமரம் அரசு. தீர்த்தம் பிரமதீர்த்தம், காமதேனுதீர்த்தம், சந்திரபுஷ்கரணி, அக்கினிதீர்த்தம், குடமுருட்டியின் பிரிவாகிய பொய்கையாறு முதலிய தீர்த்தங்களும் உள்ளன.

**தலப்பெருமைகள் :**

இத்தலம் மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூன்றுனும் சிறப்புற்றது. காமதேனு வழிபட்டுப் பேறுபெற்றது. கயிலை மலையிலிருந்து ஒரு மலைத்துண்டுவந்து தங்கியதால் மணிகூடம் எனப்பெறுவது. பிரமன், சப்தரிஷிகள், கணங்கள், தேவர், இயக்கர், கந்தருவர், இந்திரன், சூரியன், நவக்கிரகங்கள், திருமால், தசரதர் முதலியோர் வழிபட்டு அருள்பெற்றதலம். காமதேனு, பிரமதீர்த்தங்கள் மிக்க சிறப்புடையன. தர்மத்துவஜன் என்னும் அரசன் பிரமதீர்த்தத்தில் மூழ்கிக் குட்டநோய் நீங்கப்பெற்றான் எனக் கூறுவர். இத்தலத்து இறைவரைத் திருஞானசம்பந்தர் பாடி வழிபட்ட தேவாரத்திருப்பதிகம் ஒன்று உள்ளது. இக்கோயிலில் சோழர்காலக் கல்வெட்டுக்கள் பலவும் உள்ளன. சங்ககாலப்புலவர்கள் பலர் வாழ்ந்த ஊர். இத்தலத்திற்குத் தலபுராணம் ஒன்றுள்ளது. அது கிடைக்கவில்லை. திரு. பஞ்சநதம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற தலவரலாறு தேவஸ்தானத்தில் வெளியிடப்பெற்றுள்ளது.

**காமதேனு சாபம் பெற்றது :**

ஒருகாலத்தில் வசிட்ட முனிவர் வாஜபேயம் என்னும் பெருவேள்வியைச்செய்ய விரும்பி அதற்கான பொருள்களைச் சேகரித்தார். பல முனிவர்களையும் அந்தணர்களையும் வரவழைத்தார். யாகத்துக்குப் பயன்படும் பாலைத் தருதற்பொருட்டு, காமதேனுவை வரவழைக்க எண்ணினார். அப்போது காமதேனு தேவர்களோடு பிரமலோகம் சென்றிருந்ததால் வர இயலவில்லை. வசிட்டருக்குச் சினம் வந்தது. முனிவர் காமதேனுவைச் சபித்தார். இதையறிந்த நாரத முனிவர் வசிட்டரிடம்வந்து காமதேனுவின் பெருமைகளையும் காமதேனுவைச் சபித்ததால் வசிட்டருக்கு ஏற்பட்ட பாவத்தையும் கூறினார். திருவையாறு சென்று சூரியபுஷ்கரணியில்நீராடி ஜெப்பேசுரரை வழிபட்டால் பாவந்தீரும் என்றும் முனிவர்க்குச் சொன்னார். காமதேனுவும் பசு வடிவாய் அசுவத்தவனம் என்னும் இவ்வூரையடைந்து வழிபட்டுச் சாபம் நிவர்த்தியானபிறகு வசிட்டருக்குச் செய்யும் உதவிகளைப் புரியுமென்றும் உரைத்துத் தமது இருப்பிடம்சென்றார்.

**காமதேனு வழிபட்டது :**

வசிட்ட முனிவரால் காமதேனுவுக்குச் சாபம் ஏற்பட்டதை நாரதர் மூலம் அறிந்த பிரமன் தன்னிடம்வந்திருக்கும் காமதேனுவுக்கு நல்லுரைகளைக்கூறினான். காமதேனுவே! வசிட்டர் தாம்செய்ய எண்ணிய யாகத்திற்கு நீ வராததால் சினங்கொண்டு உன்னைச் சபித்துள்ளார் என்றும், சோழநாட்டில் காவிரித் தென்கரையில் உள்ள அசுவத்தவனம் சென்று சிவபெருமானின் மூன்று கண்களிலிருந்து உண்டான தீர்த்தங்களில் நீராடிச் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்டால் சாபம் தீரும் என்றும் உரைத்தார்.

பிரமன் கூறியவற்றைக் கேட்ட காமதேனு 'ஓர் பசுவடிவம் கொண்டு அசுவத்தவனம்சென்று பிரமதீர்த்தத்தில் நீராடிப் பெருமானுக்குப் பால்சுரந்து அபிடேகித்து நாவால் அழுக்கைநீக்கிப் பலவிதமாய் வழிபட்டது. தனியே ஒருஇலிங்கம் தீர்த்தம் ஆகியவற்றை உருவாக்கிப் பூஜித்தது. இறைவன் அருள்மிகு மங்களவல்லி சமேதராகச் சித்திரை அமாவாசைநாளில் இடபவாகனத்தில் அருட்காட்சி வழங்கியருளினர். காமதேனு வழிபட்டதால் இத்தலம் ஆவூர்ப் பசுபதீச்சரம் எனப் பெயர் எய்துமாறு அருள்பாலித்தார்.

**வசிட்டர் பாவம் நீங்கப்பெற்றது :**

வசிட்டமுனிவர் தாம் காமதேனுவுக்குச் சாபம் இட்டதால் ஏற்பட்ட பாவத்தைப் போக்கிக்கொள்ள, நாரதர் கூறியபடியே திருவையாற்றை அடைந்து சூரியபுஷ்கரணி காவிரி முதலிய தீர்த்தங்களில் நீராடி ஐயாறப்பரை வழிபட்டார். இறைவன் கார்த்திகைப் பூரணையில் வசிட்டமுனிவருக்கு அருட்காட்சிகொடுத்தார். அசுவத்தவனம் சென்று காமதேனுவின் உதவியால் யாகம் செய்க எனக் கூறினர். அவ்வாறே வசிட்டர் இத்தலத்திற்குவந்து தேனுதீர்த்தத்தில்நீராடி. பெருமானை வழிபட்டு, காமதேனுவின் உதவியால் வாஜபேயயாகம்செய்து இன்புற்றார்.

**தசரதர் வழிபட்டது :**

இராமபிரானின் தந்தையாகிய தசரதமன்னர் ஒருநாள் அரசவைக்கு வந்த நாரதமுனிவரை உபசரித்து வணங்கினர். நாரதர் தசரதரைநோக்கித் தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்றும், உடல் அழிவதற்குள் பல தேசங்களுக்கும் சென்று தீர்த்தமாடிப் பெருமானை வழிபடவேண்டும் என்றும் கூறினர். உடனே தசரதர் தன்மனைவியுடன் தீர்த்தயாத்திரை செய்யப்புறப்பட்டுப் பல திருத்தலங்களையும் வழிபட்டுக்கொண்டு இத்தலத்தை அடைந்தபோது, அவர் தேர் நின்றுவிட்டது. இறைவன் அசரீரியாக இத்தலத்தைப் புதுப்பித்துத் திருப்பணிகள் செய்யுமாறு கட்டளையிட்டார். தசரதர் பலநாட்கள் இத்தலத்தில் தங்கிக் கோபுரம் மண்டபம் முதலியன கட்டுவித்துத் திருவிழாக்கள்நடத்தி மகிழ்ந்தார். தசரதர் வழிபடுவதுபோன்ற சிவலிங்கம் கோயிலில் உள்ளது.

**தர்மத்துவசன் குட்டம் நீங்கியது :**

மாளுவ தேசத்தில் தர்மத்துவசன், தர்மப்புரோசன் என்ற பெயர்களை உடைய ஒரு மன்னன் இருந்தான். நீதி தவருத நிலையில் குடிகள் மகிழக் கோல்ஓச்சி வந்த அம்மன்னனுக்கு முற்பிறவிகளில் செய்த தீவினைகளின்பயனுல் உடலில் வெண்குட்டம் உண்டாயிற்று. தம் குருவாகிய யக்ஞசீலர் என்னும் முனிவரை அழைத்து, தந்நோய்

நீங்குதற்கு உரிய வழி யாது எனக் கேட்டான். முனிவர் மன்னனிடம் முற்பிறவிகளில்செய்த பாவத்தினுல் இந்நோய் விளைந்துள்ளது என்றும், சோழநாடுசென்று ஆவூர்ப்பசுபதீச்சரத்துப் பிரமதீர்த்தத்தில் நீராடிப் பசுபதீசுவரரை வழிபட்டால் குணமாகும் என்றும் கூறினர். மன்னனும் அவ்வாறே செய்து சிவராத்திரிப்போதில் தந்நோய் நீங்கப்பெற்று, பெருமானுக்குப் பல அணிகலங்களையும் கிராமங்களையும் வழங்கி வழிபட்டுத் தந்நாடுசென்ருன். அரசனுடைய வெண்குட்ட நோயைப் போக்கிய பிரம தீர்த்தம், குஷ்டரோகநிவாரண தீர்த்தம் என்னும் பெயர்பெற்றது. பெருமானுடைய மூன்று கண்களிலிருந்து உண்டான சூரியதீர்த்தம் சந்திரதீர்த்தம் அக்கினிதீர்த்தம் இத்தலத்தில் சிறப்புடைய தீர்த்தங்களாகும்.

**சங்ககாலத்தில் :**

சங்ககாலத்தில் இவ்வூர் மிக்க சிறப்புடைய ஊராக விளங்கியது. ஆவூர்கிழார், ஆவூர்மூலங்கிழார், பெருந்தலைச்சாத்தனுர் முதலிய பெரும் புலவர்களைத்தந்த ஊர் இது. ' எண்டோள் ஈசற்கு எழுபது மாடம் செய்தான் ' என்று பாராட்டப்பெறும் கோச்செங்கட்சோழனுல் மாடக்கோயிலாகத் திருப்பணிசெய்யப்பெற்றது. இவ்வூர் கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் சோழமன்னர்களின் கோட்டையாகச் சிறப்புற்று விளங்கியது என்பதைப் புறநானூற்ருல் அறியலாம்.

சோழர்களில் நெடுங்கிள்ளி நலங்கிள்ளி இருவருக்கும் நிகழ்ந்த போரில் நலங்கிள்ளிக்கு அஞ்சிய நெடுங்கிள்ளி ஆவூர்க்கோட்டைக்குள் ஒளிந்துகொண்டான். நலங்கிள்ளி ஆவூரை முற்றுகையிட்டான். முற்றுகை நீடித்தது. ஆவூர் மக்கள் உணவு உடை கிடைக்காமல் வருந்தினர். கோவூர்க்கிழார் என்னும் புலவர் கோட்டைக் கதவுகளைத் திறந்துவிடுமாறு அறிவுரை கூறினர். நெடுங்கிள்ளி ஆவூரை விட்டுவிட்டு உறையூர் சென்ருன். நலங்கிள்ளி ஆவூரைக் கைப்பற்றி அரசு புரிந்தான் என்பதைப் புறம் 44 ஆம் செய்யுளால் அறியலாம். பல வள்ளல்களிடமும் சென்று பாடிப் பரிசில்பெற்றுவந்த ஆவூர் மூலங்கிழார் இவ்வூரைச்சேர்ந்தவர். இவர்தம் புதல்வர் பெருந்தலைச்சாத்தனுர். ' முற்றிய திருவின் மூவராயினும் பெட்பின்றிதல் யாம் வேண்டலமே ' என்று பெருமிதம்படப்பாடியவர். குமணவள்ளலின்கொடை மேம்பாட்டினைப் புகழ்ந்து போற்றியவர்.

**கல்வெட்டுக்கள் :**

கர்ப்பக்கிருகத்துக்கு மேல்தளத்தில் அடிப்பகுதியில் ஒரு கல்வெட்டு உள்ளது. திரிபுவன சக்ரவர்த்தி மூன்றும் இராசேந்திரசோழ தேவனின் மூன்ரும் ஆட்சியாண்டில் நித்தவினேத வளநாட்டைச் சேர்ந்த ஆவூர்க்கூற்றத்துப் பசுபதீச்சுவரம் உடையார் கோயிலுக்கு நிலங்கள் அளித்தமையைத் தெரிவிக்கிறது.



# இறைவா! உன் ஆலயத்தில்....

தினமலர் விசேஷ நிருபர்

[ 1,200 ஏக்கர் நிலத்தைச் சொந்தமாக உடைய — குறைந்த அளவு மூன்றுலட்சரூபா வருமானம் வரக்கூடிய மன்னார்குடி ஸ்ரீ இராஜகோபாலசுவாமி திருக்கோயிலின் தற்கால நிலையையும், திருக்கோயில் நிலங்களைப் பினாமியாக மாற்றிக்கொள்வதில் குத்தகைதாரர்கள் முன்னேற்பாடாகச் செய்துகொண்ட திறமையையும் இக்கட்டுரை தெளிவாக்குகிறது. ]

ஆலயங்களின் வருமானம் குன்றியதால் சீரழிந்துவரும் பல்லாயிரக்கணக்கான இந்துக்கோயில்களின் இழிநிலையைச் சுட்டிக் காட்டிவரும் இந்தக் கட்டுரைத்தொடரில், தஞ்சைமாவட்ட ஆலயங்களைப்பற்றிக் குறிப்பிடவேண்டியது மிகவும் முக்கியமானது.

தஞ்சை மாவட்டக் கோயில்களின் பின்னணியில் கிடைக்கின்ற செய்திகள் பரபரப்பூட்டும் தகவலாக - திடுக்கிடச்செய்யும் மர்மமாக - ஆன்மிக உள்ளங்களை வேதனையில் ஆழ்த்துகின்ற புதையுண்ட வரலாருக இருக்கிறது.

பன்னெடுங்காலமாக, தஞ்சைமாவட்ட ஆலயங்களின் சொத்துக்களைக் கையாண்டவர்கள் செய்திருக்கும் அக்கிரமங்களுக்கு எல்லையே இல்லை. முகமதிய மன்னர்களின் படையெடுப்புக்களால் ஏற்பட்ட சேதங்களைவிட, கோயில்களைப் பாதுகாப்பதாகச் சொல்லிக்கொண்டு நம்மவர்கள் சுரண்டியதே அதிகம் என்று தோன்றுகிறது.

நன்செய், புன்செய் சேர்த்து 1,200 ஏக்கருக்கு உரிமையுடைய மன்னார்குடி இராஜகோபாலசுவாமிகோயில் இப்போது பூஜை செலவுகளுக்காக, இந்த நிலங்களை வைத்திருக்கும் பண்ணையார்களிடம் கையேந்திநிற்கும் பரிதாப நிலையைப் பார்க்கமுடிகிறது.

எப்படி சிக்கின ?

நில வருமானங்களை மட்டுமே நம்பி நடைபெற்றுவரும் தஞ்சை மாவட்டக் கோயில்களின் சொத்துக்கள் எப்படி சில பெரிய நிலச் சுவான்தார்களின் ஆதிக்கத்தில் சிக்கி இருக்கிறது என்பதற்கும், கோயில்கள் எப்படி பழுதடைந்து வருகின்றன என்பதற்கும் மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலசுவாமி கோயில் ஒரு எடுத்துக்காட்டாக இருக்கிறது.

பட்டப்பகலில் இரண்டுபேர் சேர்ந்து அர்ச்சகரை வெட்டிக் கொலைசெய்துவிட்டு, நகைகளைக் கொள்ளையடித்த சம்பவம் இந்தக் கோயிலில்தான் நடைபெற்றது.

சொத்துள்ள கோயில்களின்சீரழிவை அரசுக்கு எடுத்துக் காட்டும் இந்தக் கட்டுரைத் தொடரின் நோக்கத்தை எடுத்துச்சொல்லி மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயில் சொத்துக்கள்பற்றியும் இன்றைய வருமானங்கள் பற்றியும் இந்தக் கோயிலின் நிர்வாக அதிகாரியிடம் விபரம் கேட்டபோது சரியான தகவல் எதுவும் கிடைக்கவில்லை,

கோயில் அலுவலக ரெக்கார்டுகளில் உள்ள தகவல்களைக்கூடச் சொல்வதற்கு அவர்கள் மறுத்துவிட்டதோடு இந்தக் கோயிலின் அவலநிலையைச் சுட்டிக்காட்டி எதுவும் எழுதவேண்டாம்; கோயிலில் எழுகால பூஜையும் தவறுமல் நடைபெறுகிறது; கோயில் காரியங்கள் அனைத்தும் சிறப்பாகத் தடையின்றி நடைபெற்றுவருகின்றன என்று கூறினார்.

கோயில் சொத்துக்களை நிர்வகித்துப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பில் இருக்கும் நிர்வாக அதிகாரி குறைபாடுகளை மூடி மறைக்க முயன்றாலும்கூட ஆன்மீக வாதிகளும், அரசியல் வாதிகளும், விழிப் புணர்ச்சிகொண்ட நல்லவர்களும் நிறைந்த மன்னார்குடியில் இந்தக் கோயில்பற்றிய விபரங்கள் ஊர் அறிந்த ரகசியமாகவே இருக்கிறது. மன்னர்கள் விட்டுச்சென்ற கோயில் நிலங்களை இப்போது சில பண்ணையார்கள் பினாமி பெயர்களில் ஆண்டுகொண்டிருப்பதாக மன்னார்குடி மக்கள் சொல்கிறார்கள்.

பெயரைச் சொல்வதற்கே அச்சப்படுகிற அளவுக்கு ஊரிலேயே மிகப்பெரிய பணக்காரர்களாக இருக்கின்ற சில பண்ணையார்களிடம் மன்னார்குடி கோயில் நிலங்கள் சிக்கியிருக்கின்றன. இவர்களில் சிலர் செல்வாக்கு மிக்க அரசியல்வாதிகளாகவும் இருக்கிறார்களாம்.

**கோயில் நிலங்கள் :**

நெடுங்காலமாக ஏராளமான கோயில் நிலங்களைக் குறைந்த குத்தகையில் வைத்துக்கொண்டு அந்த நிலங்களில் கிடைக்கும் வருமானத்தைக்கொண்டு சொத்து வாங்கிக்கொண்டவர்கள் - பெரிய மனிதர்களாகத் தங்களை வளர்த்துக்கொண்டவர்கள் நில உச்சவரம்புச் சட்டம் கொண்டுவரப்பட்டபோது கோயில் நிலங்களையெல்லாம் பிரித்து, தங்களின் உறவினர்களின் பெயரிலும், பண்ணை வேலைக் காரர்கள் பெயரிலும் ( பினாமியாக ) மாற்றிக்கொண்டதாகச் சிலர் சொன்னார்கள்.

மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயில் அலுவலகம் வெளியிட்டிருக்கும் கோயில் வரலாறு மற்றும் சிறப்புக்களைப் பற்றிய ஒரு பிரசுரத்தில் இந்த ஆலயத்தின் வரலாற்றுச் சிறப்பும், மூர்த்திச் சிறப்பும், தீர்த்தச் சிறப்பும், திருவிழாக்கள் பற்றியும், கல்வெட்டுக்கள் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தக் கோயிலின் நிலங்களைப்பற்றியும், சொத்துக்களைப்பற்றியும் எதுவும் குறிப்பிடப் படவில்லை.

இதற்கு மாறாக அதிர்ச்சி அடையச் செய்யும் மற்றொரு செய்தி காதில் படுகிறது. இந்தக் கோயிலில் முன்பு இருந்துவந்த நிலங்கள் சொத்துக்கள் பற்றிய கல்வெட்டுக்களை ஒரு சமயத்தில் பெரிய மனிதர்கள் ரகசியமாக அகற்றிப் பூமிக்கடியில்போட்டுப் புதைத்து விட்டதாகக் கூறப்படும் செய்தியில் எந்த அளவுக்கு உண்மை இருக்கிறது என்பது தெரியவில்லை. மிகப்பெரிய கோயில்களாக இருக்கின்ற பல பிரசித்திபெற்ற இந்துக்கோயில்களுக்குக்கூட ஸ்தல வரலாறு இல்லாமல் மறைத்திருப்பதின் ரகசியம் இதுதானா ? என்று எண்ணத் தோன்றுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் இருக்கும் நிலமுள்ள பல கோயில்களில் இன்னொருவகையான அநியாயமும் நடைபெற்றிருப்பதாகக் கூறப் படுகிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு கோயில் டிரஸ்டிகளாக இருந்தவர்களில் சிலர் தங்களின் மகனுக்கு அல்லது பேரக் குழந்தைக்கு நிலமுள்ள கோவில்களின் சுவாமி பெயர்களைச்சூட்டி, பிறகு தங்களின் பொறுப்பில் உள்ள கோயில்நிலங்களை அந்த மகன் பெயருக்கு அல்லது பேரக்குழந்தையின் பெயருக்கு மாற்றி, பட்டா செய்துகொண்ட சம்பவங்கள் மக்களுக்கு அதிக விபரம் தெரியாத காலத்திலேயே நடைபெற்றுவிட்டதாகப் பரவலாகப் பேசப்படுகிறது.

உதாரணத்திற்காக ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயிலை எடுத்துக் கொண்டால் இந்தக்கோயிலின் நிலத்தைக் குத்தகைக்கு அனுபவித்து

வரும் ஒருவர், தனது குழந்தைக்கு ராஜகோபாலசாமி என்று பெயர் வைத்துக்கொண்டு, காலப்போக்கில் இன்னார் மகன் ராஜகோபால சாமிக்குச் சொந்தமான நிலத்தை இன்னாருக்கு மாற்றிக்கொடுக்கிறேன் அல்லது விற்பனை செய்கிறேன் என்று எழுதிப் பதிவுசெய்து விடுவது. (இங்குக் குறிப்பிட்டிருப்பது ஒரு உதாரணத்திற்குமட்டும் தான். எவரையும் குறிப்பிட்டுச் சொல்வதற்காக அல்ல.)

மிகப்பெரிய மனிதர்கள் இம்மாதிரியான தவறுகளைச் செய்து வந்ததால் அதைத் தட்டிக்கேட்க எவருக்கும் துணிவு வரவில்லை. உழுகிறவனுக்கே நிலம் சொந்தம் என்று உரிமை முழக்கம் செய்வோர் தங்களின் கொள்கைக்கும், கோரிக்கைக்கும் நியாயம் கற்பிக்க இந்த நிலைமையைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டார்களே தவிர தவறு செய்த பெரியமனிதர்களை எதிர்த்துப் போராடியதாகத் தெரியவில்லை.

**ஏராளம்! ஏராளம்!**

கோயில் நிலங்களைத் தங்களது வேலைக்காரர்கள் பெயருக்குக் குத்தகைக்கு எழுதிக்கொடுத்து, பிறகு தங்களதுபெயருக்கு மாற்றிக் கொண்ட சம்பவங்களும், தங்களுக்கு வேண்டியவர்களுக்குப் பட்டா செய்துகொடுத்துவிட்ட சம்பவங்களும் திருச்சி மாவட்டத்தில்மட்டு மல்ல, தஞ்சை மாவட்டத்திலும் ஏராளமாக உண்டு என்று திருப் பைஞ்ஞீலி கோயில்பற்றிய கட்டுரையைப் படித்த தஞ்சை மாவட்டக் காரர் ஒருவர் தெரிவித்தார்.

மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயிலுக்குச் சொந்தமான சுமார் 1,200 ஏக்கர் (நன்செய், புன்செய் சேர்ந்தது) நிலங்களில் இருந்து ஆண்டுதோறும் நிர்ணயிக்கப்பட்ட குத்தகை விகிதப்படி குறைந்தபட்சம் மூன்றுலட்சம்ரூபாய் வருமானம் கிடைக்கவேண்டும். ஆனால் நிலத்தின்மூலம் கிடைக்கும் இப்போதைய வருமானம் ஆண்டுக்குச் சுமார் 50,000 ரூபாய்தான் என்று கேள்விப்படுகிறோம்.

இரண்டுபோகம் விளைகின்ற நன்செய் நிலங்களில் இருந்து ஏக்கருக்கு வருடத்திற்கு எண்பதுகலத்திற்கும் குறையாமல் நெல் விளைகிறது. இந்தக் கணக்குப்படி பார்த்தால் மன்னார்குடி கோயில் நிலங்களிலிருந்து ஆண்டுதோறும் சுமார் 72,000 கலம் நெல் விளை கிறது. இந்த நெல்லின் மதிப்பு சுமார் 18 லட்சரூபாய். ஆனால் கோயில் நிலங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் குத்தகை விகிதம் ஏக்கருக்கு 6 கலம் முதல் 15 கலம் வரைதான். இந்தக் குறைந்த குத்தகை விகிதப்படி மன்னார்குடி கோயிலுக்குச் சொந்தமான 900 ஏக்கர் நன்செய் நிலங்களில் இருந்து சராசரியாகச் சுமார் 9 ஆயிரம் கலம் நெல்தான் வருமானம் வருகிறது. இதன் மதிப்பு

2,25,000 ரூபாய்தான். இந்தத் தொகையுங்கூட வசூலாகாத காரணத்தினுல் கோயில்பூஜை மற்றும் நிர்வாகச் செலவுகளுக்கே தடுமாறும்நிலை இருக்கிறது.

**நெற்களஞ்சியங்கள் :**

கோயிலின் மிகப்பெரிய நெற்களஞ்சியங்கள் எல்லாம் இப்போது காலியாகக் கிடக்கின்றன. கோயில் மாடுகளுக்குத் தீனி இல்லாத காரணத்தினுல் இரண்டு மாடுகள் செத்துப்போய் விட்டதாகவும் இதனுல் மாடுகளைப் பராமரிக்க வசதியின்றி விற்றுவிட்டதாகவும் கூறுகிருர்கள்.

முன்னுள் எம். எல். ஏ, டி. எஸ். சுவாமிநாத உடையார் இந்தக் கோயிலுக்கு ஒரு யானையை நன்கொடையாக வாங்கிக்கொடுத் திருக்கிருர். இந்த யானைக்குத் தினசரி உணவுகொடுக்கவும், பராமரிக் கவும் முடியாத நிலைமை இருந்ததால் இந்த யானையை விற்றுவிட முடிவுசெய்ததாகவும், சுவாமிநாத உடையார் இதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்ததால் பிறகு இந்த யோசனையைக் கைவிட்டுவிட்டதாக வும் சிலர் கூறுகிருர்கள்.

சுமார் 20 ஆண்டுகளுக்குமுன்பு சுவாமிநாத உடையார் இந்தக் கோயிலின் டிரஸ்டியாக இருந்தபோது, 81,00,000 ரூபாய் கோயில் பணம் இருப்பு இருந்ததாம். இப்போது என்ன இருக்கிறது? இந்தக் கோயிலுக்குச் சொந்தமான கல்யாண மண்டபத்தில் இருந்து கிடைக் கின்ற வருமானம் இல்லை என்ருல் கோயில் கதவைப் பூட்டவேண்டி யிருக்கும். அல்லது இந்த ஆலயத்தில் பணிபுரியும் சுமார் 50 ஆலய சிப்பந்திகளும் சாப்பாடு இல்லாமலும், சம்பளம் இல்லாமலும் தியாகம் செய்து பூஜை நடத்தவேண்டியிருக்கும். மன்னுர்குடி கோயிலுக்கு நிர்வாக அதிகாரியாக வருவதற்கே பலர் பயந்ததாகவும் சிறிதுகாலம் நிர்வாக அதிகாரியே இல்லாமல் கோயில் நிர்வாகம் மற்ருெரு கோயில் நிர்வாக அதிகாரியின் பொறுப்பில் நடைபெற்றுவந்ததாகவும் கூறப்படுகிறது.

கலைக் களஞ்சியமாக விளங்கும் இந்தக் கோயிலின் ராஜகோபுரம் 11 அடுக்குகளைக் கொண்டது. 154 அடி உயரம் உடையது. இந்தக் கோயில் பிராகாரத்திற்குள் 16 கோபுரங்கள் இருக்கின்றன. இதில் புதுப்பிக்கப்பட்டுள்ள முகப்பு இராஜகோபுரத்தைத்தவிர மற்றைய கோபுரங்கள் அனைத்தும் பழுதடைந்து கிடக்கின்றன. 9 அடுக்கு களைக் கொண்ட பின்பக்க கோபுரம் கீழிருந்து உச்சிவரை செடி கொடிகள் முளைத்துப் பாழடைந்து காணப்படுகிறது. கோபுரத்தின்

இரண்டு பக்கங்களிலும் விரிசல்கண்டு ஆபத்தான நிலையில் இருப்ப தோடு, கோபுரவாசல் உள்பகுதியில் நின்று பார்த்தால் எப்போது இடிந்து தலையில் விழுமோ என்று அஞ்சும் அளவுக்குக் கற்கள் உடைந்துபோய் இருக்கிறது. கோயில் கோபுரங்கள் பாழடைந்து கிடப்பதுபோலவே கோயில் பிராகாரத்திற்குள் பல இடிபாடுகளையும், சிதைந்த மதில் சுவர்களையும், புதர்க்காடாய் கிடக்கின்ற தோட்டத் தையும், புயலில் விழுந்த மரங்கள் இன்னும் அலங்கோலமாகக் கிடக்கின்ற காட்சியையும் காணமுடிகிறது.

**எங்கேபோவது ?**

சில மாதங்களுக்கு முன்பு மிகவும் கெஞ்சி நடையாய் நடந்து கோயில் நிலங்களை வைத்திருப்பவர்களிடமிருந்து சுமார் ஆயிரம் கலம் நெல்லை வசூல்செய்து, ஆலய சிப்பந்திகளுக்குச் சம்பளம் போட்டார்களாம். இந்த ஆண்டு திருவிழா நடத்த வசதி இல்லாமல் போய்விட்டதால் பழனி கோயிலில் கடன் வாங்கித் திருவிழா நடத்தப்பட்டதாம். ஏதோ வேளாவேளைக்குப் பூஜை நடந்தால் சரி என்ற அளவுக்குத்தான் கோயில் நிர்வாகம் நடைபெறுவதாகத் தெரிகிறது. பாழடைந்துவரும் கோபுரங்களை எல்லாம் செப்பனிடுவ தற்குப் பணத்திற்கு எங்கேபோவது ? ஆயிரம் ஏக்கருக்குமேல் நில மிருந்தும் ஆலயத்தைக் காப்பாற்ற முடியவில்லையே !

மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலசுவாமி கோயிலுக்குச் சொந்தமான சுமார் 1,200 ஏக்கர் ( நன்செய், புன்செய் சேர்த்து ) நிலங்களில் இருந்து கிடைத்துவந்த வருமானம் ஆண்டுக்கு ஆண்டு எப்படிக் குறைந்திருக்கிறது என்பதைப் பாருங்கள்.

74-ம் ஆண்டு வருமானம் 2½ லட்சம் ரூபாய், 75-ம் ஆண்டு வருமானம் 2¼ லட்சம் ரூபாய். 76-ம் ஆண்டு வருமானம் 2 லட்சம் ரூபாய், 77-ம் ஆண்டு வருமானம் 1¾ லட்சம் ரூபாய், 78-ம் ஆண்டு வருமானம் 1¼ லட்சம் ரூபாய்.

குத்தகைதாரர்களிடம் இருந்து கோயிலுக்கு 30,000 கலம் அதாவது 15,000 மூட்டைகள் நெல் பாக்கி வரவேண்டியிருக்கிறது. 230 ஏக்கர் நன்செய் நிலத்தைச் சாகுபடிசெய்துவருகிற பாமணி கூட்டுறவு விவசாய சங்கமும் குத்தகையைப் பாக்கிவைத்திருக்கிறது.

ஆண்டு ஒன்றுக்கு, கோயில் நிலங்களுக்கு ரெவின்யூ கிஸ்தியாக 35,000 ரூபாய் கட்டவேண்டும். வருமானம் இல்லாததால் இரண்டு வருடங்களாகக் கிஸ்தி செலுத்தப்படவில்லை. வருடத்தில் சுமார் 3,50,000 ரூபாய்க்கு, கோயில் வரவு-செலவு பட்ஜெட் தயார்செய்யப் படுகிறது. இதில் சுமார் 50,000 ரூபாய் துண்டு விழுகிறது என்று கூறப்படுகிறது.

கோயில் வருமானம் குறைந்ததால் படிப்படியாகச் செலவுகளை யும் குறைக்கவேண்டிய கட்டாயம் நேர்ந்துள்ளது. முன்பு 60 ஊழியர்கள் பணிபுரிந்த இந்தக்கோயிலில் இப்போது 46 பேர்தான் இருக்கிறார்கள். மற்றவர்கள் எப்படி வேலை நீக்கம் செய்யப்பட்டார்கள் என்ற விபரம் தெரியவில்லை. ஆலய ஊழியர்களுக்கு மாதச் சம்பளம் எவ்வளவு இருக்கும்? 40 ரூபாயிலிருந்து 60 ரூபாய்வரைதான். இந்தக் கோயிலில் வேலைசெய்கிற 46 ஊழியர்களில் ஒரே ஒருவருக் குத்தான் 150 ரூபாய் சம்பளம் கிடைக்கும் என்று கேள்விப்படு கிறோம்.

இந்துக் கோயிலின் சொத்துக்களால் யாருடைய வாழ்வு மலர்ந் திருக்கிறது என்பதற்கு இந்த உதாரணம் போதாதா? இனியாவது அரசு தன் பார்வையை ஆலயங்களின் பக்கம் திருப்பும் என்று எதிர்பார்க்கிறோம்.

நன்றி! — தினமலர், 7—10—78.

---

# அன்னை அருள்மாலை

திருமுறைக் கலாநிதி

**வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

இச்சித் திடும்திருக் கருவிலிக் கொட்டிட்டை
இணையும்சர் வாங்கஅம்மை
ஈசனுறை திருப்பேணு பெருந்துறை மலையரசி
எல்லோருங் கைகுவித்து
உச்சிவைத் திடும்திரு நறையூர்ச்சித் தீச்சரம்
உணர்வரிய அழகாம்பிகை
ஓதும்அரி சிற்கரைப் புத்தூ ரழகம்மை
ஒளிதிகழ் திருச்சிவபுரம்
நச்சிவாழ் சிங்கார வல்லியே திருக்கலய
நல்லூரில் அமிர்தவல்லி
நற்கருக் குடிசர்வா லங்க்ருத மின்னம்மை
நாடிடும்திரு வாஞ்சியம்
பச்சிளங் குமரிமங் களநா யகிஇனிய
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேத் கருள்அன்னையே. (16)

# குத்தகை பாக்கியைச் செலுத்தக் கோரிக்கை

[ தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர். எம். வீரப்பன் அவர்கள், வடுகச்சேரி மினி சுகாதார நிலையத்தைத் திறந்துவைத்தபோது நிகழ்த்திய உரை. ]

## ஆலய நிலங்கள் :

* * * கடந்தகாலத்தில் உள்ள ஆலயங்களுக்குச் சொந்தமான விளைச்சல் நிலங்களை விவசாயிகள் என்ற பெயரில் குறைந்த குத்தகைக்குப் பல ஏக்கர் நிலங்களை எடுத்துக்கொண்டு அதைத் தனது குடும்பத்தில் உள்ளவர்களுக்கே ஐந்து ஐந்து ஏக்கராகப் பிரித்து வைத்துக்கொண்டும், சட்டத்தின் பாதுகாப்பைப் பயன்படுத்திக் கொண்டும் சிலர் ஆலயங்களுக்குக் குத்தகை நெல்லைப் பல ஆண்டுகளாகக் கொடுக்காமல் குட்டிமிராசுகளாக இருக்கின்றார்கள். இதன் காரணமாகச் சுமார் 20 கோடி ரூபாய்கள் ஆலயங்களுக்கு நஷ்டம் ஏற்பட்டு, ஆலயங்கள் நிர்வாகச் செலவிற்கும், மற்றும் மக்களுக்குப் பயன்படும் கல்வி, மருத்துவமனைபோன்ற முன்னேற்ற ஆக்கப்பணிகளுக்கும் தடை ஏற்பட்டுவிட்டது.

இந்தநிலையை இன்றைய அரசு மாற்றி அமைக்க முனைந்துள்ளது. ஆகவே, பொதுமக்கள் அரசுடன் ஒத்துழைத்து ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களை யார்யார் பயன்படுத்திப் பயன் அடைகிறார்கள் என்ற விபரத்தை அறநிலையத் துறைக்குத் தெரிவிக்கவேண்டும்.

நன்றி. —தினமலர், 23—10—78.



# கோயில் சொத்தைக் கபளீகரம் செய்வதா?

[ தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு. ஆர். எம். வீரப்பன் அவர்கள், திருவாரூர் நகரமன்ற சமுதாய மண்டபத்தைத் திறந்துவைத்த போது பேசியது ]

"* * நமது நாட்டின் கலைச்செல்வங்களாக - தமிழரின் பண்டைய பெருமையை எடுத்துக் கூறும் சின்னங்களாக விளங்குகின்ற ஆலயங்கள் அழியும் நிலையை நாம் உருவாக்குவோமேயானால் நமது நாகரிகம், பண்பாடு, இசை நாடகக்கலைகள் எல்லாமே அழிந்துவிடும். 20-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்கள் தமிழனின் பண்பாட்டையே பெருமைகளையே அழித்துவிட்டார்கள் என்று வருங்கால சந்ததியினர் நம்மைத் தூற்றும் நிலை ஏற்படும். ஆலயச்சொத்தைச் சாப்பிடுபவர்கள் அதை அழிக்கும்வேலையில் ஈடுபட்டிருக்கும் இடைத்தரகர்கள் - ஆலயக் குத்தகைப் பணத்தைக் கபளீகரம் செய்பவர்கள் இதைப் புரிந்துகொள்ளவேண்டும்.

**ஆண்டவனுக்குத் துரோகம் :**

அரசன் அன்று கொன்றால் தெய்வம் நின்று கொல்லும் என்பது பழமொழி. மனிதனுக்கு மனிதன் துரோகம் செய்வது போதாது என்று ஆண்டவனுக்கும் துரோகம் செய்யலாமா? ஆலய நிலக் குத்தகை பாக்கி ரூபாய் 20 கோடி வசூலாக வேண்டியிருக்கிறது. ஆலயத்தை நம்பிவாழும் ஒரு லட்சம் பணியாளர்கள் 3 அல்லது 4 மாத சம்பளம் வாங்காமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் சில இடைத்தரகர்கள் ஆலயநிலங்களைக் கூறுபோட்டுக்கொண்டு - மகன், மாமன், பெண்டாட்டி பெயர்களை வைத்துக்கொண்டு குத்தகை அளக்காமல் கொள்ளையடித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தக் கூட்டுக் கொள்ளையிலிருந்து ஆலய நிலங்களை மீட்க அரசுக்கு உறுதுணையாகப் பொது மக்கள் இருக்கவேண்டும். திருமுருக கிருபானந்த வாரியார் போன்ற பக்தப் பிரமுகர்கள் தெய்வீகப் பேரவைகளில் இனி பக்தி உபதேசத்திற்குப் பதிலாகக் கடமை, ஒழுக்கம் என்பதைப் பற்றி உபதேசம்செய்ய முன்வரவேண்டும்.

**தஞ்சை கோயில்:**

பண்டைய காலத்தில் கொடை வள்ளல்கள் ஆலயத்திற்கு நிர்வாகத்திற்காக நல்ல எண்ணத்தில் நிலம் ஒதுக்கீடு செய்துள்ளார்கள். அவர்கள் எண்ணத்தை நிறைவேற்றாமல் அதில் புகுந்து கொள்ளை அடிப்பதா தெய்வீகம்? பகுத்தறிவு வாதிகளோ, கடவுள் இல்லை என்று சொல்பவர்களோ கொள்ளை அடிக்கவில்லை. விபூதி பூசிக் கொள்பவர்களும், பட்டைநாமம் போட்டுக்கொண்டிருப்பவர்களுமே இக்கொள்ளையில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். சிவன் சொத்து குலநாசம் என்றால் வைஷ்ணவ கோயிலின் சொத்தைச் சாப்பிடு கிறேன் என்கிறார்கள். மாமன்னன் ராஜராஜன் தஞ்சையில் ஓங்கி உயர்ந்த ஆலயத்தைக் கட்டிவைத்தானே ; அந்தக் கட்டுமான வித்தையை அகில உலகமும் பார்த்து வியப்படைகிறதே ; அப்படி ஒரு கோயிலை இன்று நம்மால் கட்டமுடியுமா? சிதம்பரத்தில் இருப்பது போல் பொன் ஓடுகள் உள்ள ஓர் ஆலயத்தை இன்று நம்மால் கட்ட முடியுமா?

கல்தோன்றி மண்தோன்றாத காலத்திற்கு முன்பேதோன்றிய மூத்த குடிமகன் தமிழன் என்று சொல்லிக்கொள்கிறோமே ; அதற்குச் சான்றுகளாக இருக்கும் இந்த ஆலயங்களையும் அதில் உள்ள சிற்பங்களையும், ஓவியங்களையும் அழிக்க அனுமதித்துவிட்டால் நமது பெருமைக்கு எதைச்சான்றாகக் கூறமுடியும்? நாலடி அஸ்திவாரத்தில் இவ்வளவு பெரிய ஆலயத்தைத் தஞ்சையில் எழுப்பினானே ; நமது நாதஸ்வரத்தைப்போல் ஒரு சிறந்த வாத்தியத்தை உலகம் இன்னும் கண்டுபிடிக்க வில்லையே ; அப்படிப்பட்ட நமது புராதன கலைச் செல்வங்களை அழிக்கவிட்டுவிட்டு அயல்நாட்டுப் பாப் சங்கீதத்தைக் கேட்டுக்கொண்டிருக்கப் போகின்றீர்களா? ஆலயத்தின் நிலக்குத்தகையைக் கொடுத்துவிடுங்கள் என்றால் முடிந்தால் வாங்கிக்கொள் என்று சொல்லும் அளவிற்கு இடைத் தரகர்களின் மனோபாவம் வளர்ந்துள்ளது. உண்மையாகப் பயிர்செய்யும் தொழிலாளிக்கு இந்த அரசு இடையூறு செய்யாது. ஆனால் இடைத்தரகர்களாக இருந்து கொண்டு ஆலயசொத்தைக் கொள்ளையடிக்கும்கூட்டத்தை ஒழித்துக் கட்ட சட்டம் வரத்தான்போகிறது. எம். ஜி. ஆர். துணிவுடன் அதைச் செய்யத்தான்போகிறார். அப்படிச்செய்யும்போது எதிர்ப்புகள் கிளம்பும். தொழிலாளிகளைக் கொண்டுவந்து நிறுத்திக் கொடியைப் பிடித்துக்கொண்டு எந்த அரசியல்வாதிகள் வருவார்கள் என்பதும் எங்களுக்குத்தெரியும். மக்களுக்கு நன்மை எது என்பதை அறிந்து செய்யும்பொழுது அதில் ஏற்படும்தடைக்கற்களை அகற்ற எம். ஜி. ஆர். அரசு தயங்காது. * *

நன்றி. — தினமலர், 23—10—78.

# ஆலய நில வருமானத்தை அபிவிருத்தி செய்ய இயலுமா?

**கரந்தை திரு. பி. சுப்பிரமணியம்**

தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சிகாலம் முதற்கொண்டு தி. மு. கழக ஆட்சிகாலம் வரையில் அமுல்படுத்தப்பட்ட நிலச்சீர்திருத்தச் சட்டங்களின் காரணமாக ஆலயங்களின் நில வருமானம் குறைந்து விட்டது. அல்லது இல்லாமலே போய்விட்டது என்ற ஒரு நிலையினால் ஆலயங்களை நம்பி வாழும் லட்சக்கணக்கான தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது வெள்ளிடைமலை. இந்தப்பாதிப்பு மற்றைய மாவட்டங்களைவிட ஆலயங்களை மிக அதிகமாகக்கொண்ட தஞ்சை மாவட்டத்தில் மிக அதிகம் என்றால் அது மிகையாகாது.

சமீபத்தில் ஆலய நில வருமானத்தை அபிவிருத்தி செய்வதன் சாத்தியக்கூறுகளை ஆராயத் தஞ்சை மாவட்ட தீவிர விவசாய திட்ட இலாகா ஒரு ஆராய்ச்சியை மேற்கொண்டது. ஆலயங்களுக்கு நிலவருமானம் ஏன் வந்துசேர்வதில்லை என்பதை ஆராய்வதற்காக மூன்று ஆலயங்களில் இந்த ஆராய்ச்சியைத் தீவிர விவசாயத்திட்ட இலாகா மேற்கொண்டது. பழைய டெல்டா பகுதியில் ஒன்றும், புதிய டெல்டா பகுதியைச் சேர்ந்த பாசனப் பகுதியில் ஒன்றும், கடற்கரைப் பகுதியில் ஒன்றும் ஆக மூன்று ஆலயங்களைத் தேர்ந் தெடுத்து, அதன் நிலக்குத்தகைதாரர்கள் அல்லது சாகுபடியாளர்கள் 9 நபர்களிடம் பேட்டி காணப்பட்டது. இந்தமூன்று ஆலயங்களிலும் 9 சாகுபடிதாரர்கள் சாகுபடி செய்கின்ற நிலப்பரப்பளவு 22·15 ஏக்கராகும்.

**குத்தகை நெல் :**

இந்தச் சாகுபடிதாரர்களின் சாகுபடி முறைகள் பரிசீலிக்கப்பட்ட போது சொந்த நிலத்தில் விவசாயம் செய்யும் சாகுபடியாளர்களை விடக் குத்தகை சாகுபடிதாரர்களின் சாகுபடி திறமை குறைவாகவே இருக்கிறது. குத்தகைதாரர்களில் 67 சதவிகிதத்தினர் குத்தகை அளக்காமல் பாக்கி வைத்திருப்பவர்களாக இருக்கிறார்கள். ஆலயங் களின் நிர்வாகத்தை அரசு மேற்கொள்வதற்கு முன்னதாக, நிரந்தர மில்லாத சாகுபடி உரிமைகள் உரிமையின்மூலம் உறுதிசெய்யப் பட்டது. முன்னதாக ஆலயநிர்வாகம் உள்நாட்டு முக்கிய பிரமுகர்கள்

சிலரிடம் இருந்தபோது அவர்கள் தன்னிச்சையாகக் குத்தகை வருமானத்தை நிர்ணயம் செய்தார்கள்.

ஆலய அதிகாரிகள் சிலர் இதன் தொடர்பாகக் கருத்துத் தெரிவிக்கையில் ஆலயநில சாகுபடி சாதாரண முறைக்கு மிகவும் கீழ்த்தரமாகவே நடைபெறுகிறது. பெருவாரியான ஆலயங்களில் நில வருமானத்தின் குத்தகைத்தொகை செலுத்தப்படவில்லை என்ற அநேக வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. மடங்களுக்குச் சொந்தமான நிலவருமானம் பற்றியும் ஆய்வு செய்ததில் மடங்களின் நிலக் குத்தகைதாரர்களில் 75 சதவிகிதத்தினர் குத்தகை அளக்காமலேயே இருக்கிறார்கள். இதில் மற்றொரு விசித்திரம் என்ன வென்றால் சாகுபடி செய்பவர்கள் யாரோ சிலர். ஆனால் குத்தகைப் பத்திரமிருப்பது சாகுபடி செய்யாத இடைத் தரகர்களாக விளங்கும் செல்வாக்குப் பெற்றவர்களிடம். உண்மையாகவே சாகுபடி செய்ப வர்கள் இடைத்தரகர்களுக்கு ஒழுங்காக விளைவை வழங்கியிருந்தும் அந்த இடைத் தரகர்கள் ஆலயங்களுக்கு முறையாகக் குத்தகை செலுத்தாமல் இருப்பது பெரும்பாலான இடங்களில் நடைமுறையாக இருந்துவருகிறது.

தஞ்சை மாவட்டத்தில் விவசாய நிலப்பரப்பு 12 லட்சம் ஏக்கர் என்றால் இதில் 6-ல் ஒரு பகுதி ஆலயங்கள் அல்லது மடங்களுக்குச் சொந்தமானவைகளாகஇருக்கின்றன. நிலச்சீர்திருத்தச்சட்டங்களின் அடிப்படையில் நிலங்களைத் துண்டுதுண்டாக்கிநிலமற்றஏழைகளுக்கு சாகுபடிக்கு வழங்குவதன்மூலம் நிலவருமானம் அதிகரிப்பதுடன் நிலக் குத்தகையும் சரிவர வசூலாகும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இந்த அடிப்படையில் நிலத்தைக் குத்தகைக்குப் பெற்றவர்களுள் பண்ணையாள் முறையில் வேலை பார்த்தவர்கள்கூட ஆலயத்தின் பங்கைச் செலுத்தவில்லை என்பதே பெரும் குறைபாடாக இருந்து வருகிறது. கடந்த 10 ஆண்டுகளில் குத்தகைதாரர்கள் கொடுக்க வேண்டிய நெல் பாக்கி மிகவும் அதிகரித்திருக்கிறது. குத்தகைதாரர் களின் மனப்போக்கு, ஏழ்மை நிலை, அரசின் தள்ளிவைப்பு உத்திரவு இவைகளின் காரணமாக இந்தக் குத்தகை பாக்கி அதிகரித்துக் கொண்டிருக்கிறது. குத்தகை பாக்கியிருந்தாலும் சாகுபடியாளர்கள் நிலத்தை இழக்காமல் தொடர்ந்து சாகுபடிசெய்ய, தமிழ்நாடு பொது அறக்கட்டளை சட்டம் பாதுகாப்பளிக்கிறது. இந்தநிலைமை, நிலத்தில் வருமானம் இருந்தாலும் ஆலயத்திற்குக் குத்தகை நெல்லை அளக்க வேண்டாம் என்ற மனப்பான்மையை வளர்த்தது. காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் குத்தகைதாரர்களிடத்தில் ஏற்பட்ட இந்த மனப்பான்மை, தி. மு. க. ஆட்சிக்காலத்தில் வளர்ச்சியடைந்து மதப் பற்று இல்லாதவர்களும் ஆலயங்களின் அறங்காவலர்களாக நியமனம் பெறும் புதிய சூழ்நிலையையும் தமிழ்நாட்டில் உண்டாக்குகிறது.

**ஆலயங்கள் வருமானம் :**

மேற்கண்ட சூழ்நிலைகளால் ஆலயங்களின் நில வருமானம் மிகவும் குறைந்துபோனதுடன் ஆலயங்களில் பணியாற்றும் ஊழியர்களுக்கு மாதம் தவருமல் ஊதியம் வழங்க இயலாத நிலைமையைக் கருத்தில்கொண்டு, தமிழ்நாடு இந்து அறநிலைய இலாகா தேவையான நடவடிக்கைகளை எடுத்து, குத்தகை பாக்கிகளை வசூலிக்கும்படி ஆலயங்களின் நிர்வாகிகளுக்கு ஆணை பிறப்பித்திருக்கிறேன் என்று சமீபத்தில் திருவாரூரில் ஒரு பேட்டியில் அற நிலைய ஆணையர் U. சுப்பிரமணியம் தெரிவித்தார். ஆலய நிலங்களைக் கூட்டுறவு பண்ணைகள்மூலம் சாகுபடி செய்பவர்கள்கூட, ஏறத்தாழ 83 ஆயிரம் குவிண்டால் நெல் இதுவரையில் அளக்காமல் இருக்கிருர்கள். இதில் பெரும்பகுதி தஞ்சை மாவட்ட ஆலயங்களில் இருந்து வழங்கப்பட்ட நிலக்குத்தகை பாக்கியாகும். ஆண்டுக்கு ரூபாய் பத்தாயிரத்திற்குக் குறையாத ஆலயங்களின் எண்ணிக்கை 1,425. அதற்கு குறைவான வருமானமுள்ள ஆலயங்களின் எண்ணிக்கை 23,180. இவைகளில் ஆண்டுக்கு ஒரு லட்சத்திற்கும் அதிகமான வருமானமுடைய ஆலயங்கள் 129 ஆகும். தற்சமயம் ஆலயங்களின் வருமானம் தமிழ் நாட்டில் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 15 கோடியாக உயர்ந்திருக்கிறது. ஆனுல் கடந்த 6 ஆண்டுகளில் ஆலயத்திற்கு வரவேண்டிய குத்தகை பாக்கி மட்டும் ரூ. 18 கோடி இருக்கிறது. இதில் பெரும் பகுதி தஞ்சை மாவட்ட ஆலய நிலங்களிலிருந்து வரவேண்டியதாக இருக்கிறது என்ருர்.

தமிழக கவர்னர் பிரபுதாஸ் பட்வாரியிடம் மாயவரத்திற்கு அருகில் உள்ள தருமபுரம் மடத்தின்சார்பில் ஒரு மகஜர் கொடுக்கப்பட்டது. அதில் இந்த மடம் 27 ஆலயங்களை நிர்வகிக்கிறது என்றும், காசியிலிருந்து கன்னியாகுமரி வரையில் கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்றும், கடவுள் நம்பிக்கையுள்ள காரணத்தினுல் ஒழுங்காக நிலக்குத்தகையைச் செலுத்திவந்த நேர்மையான சில குத்தகைதாரர்கள் கூட நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் காரணமாகக் குத்தகை அளக்காமல் பாக்கிவைக்கத் தொடங்கியுள்ளார்கள்; இதன் காரணமாக வழக்கமாக நடைபெறும் அன்ருடபூஜைகளையும் நிறுத்திவிடும் சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. ஆலய நிர்வாகம் தடைபெருமல் நடைபெறுதற்கு வசதியாகக் களத்துமேட்டிலேயே நெல்லைப்பகிர்ந்து கொள்ளும்முறை அமுல்படுத்த வேண்டும் என்று தெரிவித்திருந்தனர். இதேபோல் திருவாவடுதுறை ஆதீன மடத்தின் சார்பில் கவர்னரிடம் வழங்கப்பட்ட மகஜரில் மடத்திற்குச் சொந்தமான நிலவருமானம் முழுவதும் நின்றுபோய்விட்டன. ஒருதலைப்பட்சமான நிலச்சீர் திருத்த சட்டங்களின் காரணமாக ஒரு குறிப்பிட்ட வகுப்பாருக்கு

நன்மையும் மற்றவர்களுக்கு நஷ்டமாகவும் போய்விடுகின்றது. நல்ல விளைவு இருந்தால் கூட மடத்திற்கு விளைவில் 40 சத விகிதத்தைக் குத்தகைதாரர்கள் வழங்குவது இல்லை.

திருவாவடுதுறை ஆதீனம் ஒவ்வொரு ஆண்டும் ரூ. 3·50 லட்சம் நிலவரி செலுத்திவருகிறது. இந்த அறக்கட்டளை நல்லவிதமாக நடைபெற நிலச்சீர்திருத்த சட்டங்களிலிருந்து விதி விலக்கு அளித்து, நில வருமானத்தில் 40 சதவிகிதம் மடங்களுக்குத் தவறாமல் கிடைக்கச்செய்ய வேண்டும் என்று தெரிவித்து இருக்கின்றனர்.

தமிழகத்தில் ஆலயங்களுக்கும் மடங்களுக்கும் நில வருமானத்தில் எவ்வித கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கிறதோ அதே விதமான இடையூறுகள் மசூதிகளுக்கும், மாதாகோவில்களுக்கும் ஏற்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டில் ஏறத்தாழ 2 ஆயிரம் மசூதிகள் மற்றும் தர்காக்கள் இருக்கின்றன. இவைகளில் 40 க்கு ஆண்டு வருமானம் 20 ஆயிரத்துக்கு மேல் இருக்கிறது. மாதா கோவில்கள் நன்கொடைகள் மூலம் செயல்படும் காரணத்தால் அவைகள்மீது அரசாங்கக் கட்டுப்பாடு கிடையாது. மேலும் மாதா கோவில்களுக்கோ மசூதிகளுக்கோ இந்து ஆலயங்களைப் போல் பெரும் அளவில் நிலவருவாயும் இல்லை.

**அமைச்சர் நடவடிக்கை :**

நாங்கள் பகுத்தறிவுப் பாசறையிலிருந்து பெரியார்வழிவந்தவர்கள் என்றாலும் கடவுள்நம்பிக்கை அற்றவர்களை ஆலயங்களில் அறங்காவலர்களாக நியமனம்செய்து ஆலயசொத்துக்களைக் கொள்ளையடிக்க அனுமதிக்கமாட்டோம். கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துக்கு மூத்தகுடிமகன் தமிழன் என்ற பெருமையை நமக்குத் தேடித்தருவது ஆலயச் செல்வங்களே என்றால் அது மிகையாகாது. ஆலயங்கள் அழிந்தால் தமிழ்ப்பண்பு தமிழனின் நாகரிகம் எல்லாமே அழிந்துவிடும் என்பதை இன்றைய அரசு உணர்ந்திருக்கிறது என்று அறநிலைய அமைச்சர் ஆர். எம் வீரப்பன் சில நாட்களுக்குமுன் திருவாரூரில் தெரிவித்திருக்கிறார்.

அமைச்சர் தெரிவித்தபடி குத்தகைதார் பாதுகாப்புச் சட்டத்திலிருந்து ஆலய நிலங்களுக்கு விதிவிலக்கு கிடைக்கலாம். ஆலயத்திற்குச் சொந்தமான கடைகள் சில குறிப்பிட்ட நபர்களிடம் நிரந்தரமாகக் குறைந்த வாடகைக்கு இருந்துவருவது ரத்து செய்யப்பட்டு 3 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஏலமிடும் பழக்கம் அனுமதிக்கப்படலாம். அரசியல் கட்சி சார்பில்லாத கடவுள்நம்பிக்கையுடைய நல்லவர்கள்

ஆலயங்களின் அறங்காவலர்களாக நியமிக்கப்படலாம். அப்படி நியமிக்கப்படுபவர்கள் அமைச்சர்களுக்கோ அல்லது ஆணையருக்கோ உதவித் துணை ஆணையர்களுக்கோ உறவினர்களாக இல்லாமல் இருப்பர் என்றும் பொதுமக்கள் நம்பலாம். அரசியலில் செல்வாக்கை இழந்தவர்கள் ஏதாவது ஒருவழியில் செல்வாக்கைத் தேடிக்கொள்ள ஆலயங்களின் அறங்காவலர்களாகவோ அல்லது அவைகளில் வசூலுக்கு அமைக்கப்படும் சதய விழா போன்ற கமிட்டிகளிலோ தலைமைப் பொறுப்பை வகிக்க முயல்வார்களே ஆனால் இன்றைய அரசு அதற்கு இடம் கொடுக்காது என்பதை அறநிலைய அமைச்சரின் பேச்சிலிருந்து தெரிந்துகொள்ளமுடிந்தது. தமிழக ஆலயங்களுக்கு ஒளிமயமான ஓர் எதிர்காலம் இருப்பதைப் பொதுமக்கள் உணர முடிகிறது.

நன்றி! — தினமலர், 3—11—78.

---

# குழந்தைக்குப்

# பால்கொடுக்க மறுத்தால் புற்றுநோய்

பெற்றெடுத்த குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்க மறுக்கும் தாய்க்கு மார்பில் புற்றுநோய்தோன்றும். ஆபத்து அதிகம்.

இதனை, சோவியத் மருத்துவ விஞ்ஞானிகள் நீண்ட ஆராய்ச்சிக்குப்பின்னர் கண்டுபிடித்துள்ளனர்.

பெண் என்பவள், பிள்ளைகளைப் பெற்றெடுப்பதுடன், அந்தப்பிள்ளைகளுக்குத் தானே தாய்ப்பால் ஊட்டி வளர்க்கவும்வேண்டும். பிள்ளைக்குத் தாய்ப்பால்கொடுத்தால் தன் அழகு குன்றிவிடும் என்பதாலோ, அல்லது நாகரிகமான செயலாக இருக்காது என்பதாலோ ஏதாவதுகாரணத்தினால் அவள் இவ்வாறு செய்யத்தவறினால், உடம்பின் முக்கிய கிரியைகள் பாதிக்கப்படுகின்றன. இதனால் மார்பகச்சுரப்பி களில் புற்றுநோய் தோன்றலாம். எனவே தற்போதைய மாதர்கள் பலரிடம் மார்பகங்களில் புற்றுநோய் தோன்றுகிறது. (பிரஸ் - இந்தியா.)

நன்றி! –தினமணி, 30–10–78.

# செய்திகள்

## ஆதீனத்திருக்கோயில்களில் நிறைபணி விழா

நிறைபணி விழா புரட்டாசித்திங்கள் பௌர்ணமிநாளில் ஆலயங்களில் நடைபெறும் ஏகதின உற்சவமாகும். இது மிகச்சிறப்புடைய விழா. 15—10—78 அன்று ஆதீனத்திலும் ஆதீனத் திருக்கோயில்களிலும் இவ் விழா சிறப்பாக நடைபெற்றது. திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரர் திருக்கோயில், சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம் ஸ்ரீ பிரமபுரீசுவரர் திருக்கோயில், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரர் திருக்கோயில், தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் முதலிய இடங்களில் நிறைபணிவிழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. அன்பர்கள் பலரும் வழிபட்டு இறையருள்பெற்றனர்.

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி குருபூஜை விழா

தருமையாதீனத்தில் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானமாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஏழாவது ஆண்டுக் குருபூஜை விழா 24—10—78 செவ்வாய்க்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது. காலை மாலை இரு வேளைகளிலும் 26-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருமூர்த்த ஆலயத்திற்கு எழுந்தருளி விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் வழிபாடு நிகழ்த்தினார்கள். காலை ஆராதனைக்குப் பிறகு 10 மணியளவில் வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ., வித்துவான். திரு. வி. சபேசன், வித்துவான். திருமதி .ப. நீலா, எம்.ஏ ஆகியோர் குரு லிங்க சங்கம வழிபாடுகளைப்பற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். 1 மணிக்கு மாகேசுவரபூசை. மாலை 6 மணியளவில் வேலூர் திரு. க. சொக்கலிங்கம், சீகாழி திரு. தி. திருஞானசம்பந்தம் குழுவினரின் திருமுறை இசையரங்கு நிகழ்ந்தது. இரவு வழிபாட்டின் போது, மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் விழா மலராக வெளியிடப்பெற்ற திருக்களிற்றும்படியார் என்ற நூலின் சிறப்பினை எடுத்து மொழிந்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அன்பர்களுக்கு விழா மலரும் அருட்பிரசாதமும் வழங்கியருளினார்கள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் மாத ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் வழிபாடு 25—10—78 புதன்கிழமை காலை திருநல்லூர் அருள்மிகு பர்வதசுந்தரி உடனுகிய அருள்மிகு பெரியாண்டேசுவரர் ஆலயத்திலும். மாலை திருஆரூர்ப் பசுபதீச்சரம் அருள்மிகு மங்களநாயகி உடனுகிய அருள்மிகு பசுபதீசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேகஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. திருபுவனம் ஓதுவார் திரு. தண்டபாணிதேசிகர் அவ்வத்தலத் திருப்பதிகங்களைப் பாராயணம் செய்தனர். அச்சிட்ட தலப் பதிக வெளியீடுகள் ஆங்காங்கும் வழங்கப்பட்டன. திருநல்லூரில் சுந்தரப்பெருமாள் கோயில் திரு. சு. சுவாமிநாததேசிகர் தலைமையில் வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம்., ஏ., 'அப்பரும் அமர்நீதியாரும்' என்றபொருள் பற்றியும். திருஆரூர்ப்பசுபதீச்சரத்தில் குடந்தை திரு. எஸ். சுந்தரேசன் செட்டியார் தலைமையில் திருக்கருகாவூர் தொண்டர் திரு. கோ. சிவஞானம் 'ஞானசம்பந்தர்' என்ற பொருள்பற்றியும், வித்துவான். திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. 'திருமுறைப் பெருமை' என்ற பொருள்பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். அன்பர்கள் பலரும் வழிபாட்டில் கலந்துகொண்டு வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுர் குருபூஜைவிழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் 31-10-78 அன்று ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனுர் குருபூஜை விழா சிறப்பாக நடைபெற்றது. மாலை 6 மணியளவில் தருமையாதீனம் வித்துவான். திரு. மு. ஆறுமுகதேசிகர், வித்துவான், திரு. வி. சபேசன் ஆகியோர் மெய்கண்டார் அருள்வரலாறு பற்றியும், அவர் அருளிய சிவஞான போத நூலைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அனைவருக்கும் அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள் ஆதீனத்தின் சார்பில் திருவெண்ணெநல்லூர் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுரின் குருமூர்த்த ஆலயத்திலும் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்பெற்றன. 1—11—78 காலை பெண்ணுகடம் ஸ்ரீ மெய்கண்டதேவர் ஆலயத்திலும் திருத்தூங்கானைமாடம் அருள்மிகு கடந்தைநாயகி உடனுகிய அருள்மிகு சுடர்க் கொழுந்தீசர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்தப்பெற்றன.

---

# எதிர்காலம்

**ஜோதிஷம். திரு. A. இராசமாணிக்கம்**
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**காளயுக்திஸு கார்த்திகை 1உ முதல் 29உ முடிய.**

**(17—11—78 முதல் 15—12—78 முடிய)**

ஸ்ரீ காளயுக்தி ஸு ஐப்பசிமீ 30உ குருவாரம் உரோகணி நட்சத்திரம் கரசைகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 29 நாழிகை 41விநாடிக்கு ரிஷபலக்கினத்தில் லோகரட்சகரான சூரியபகவான் லோக க்ஷேமார்த்தமாக துலாராசியிலிருந்து விருச்சிகராசி சங்கிரமணமாகக் கார்த்திகை மாதம் பிரவேசம் செய்கிறார். அன்று விஷ்ணுபதி புண்யகாலமாகும். மறுதினம் கார்த்திகை மாதம் முதல்தேதியாகிறது. சங்கிரம காலத்தில் 4 கிரகங்கள் உச்சம் ஆட்சி ஸ்தானங்களில் இருப்பதால் லோகத்தில் நகை, இரத்னம், பட்டு இவற்றின்வர்த்தகம் மேலோங்கும். நகை நாணய லேவாதேவி தொழிலுடையோருக்கு நன்மை ஏற்படும். தேசங்களில் மந்திரிகள், ஆளுநர்கள் தேசபிரஜா நலன்களுக்குப் பாரபட்சமின்றி எல்லாச் சார்பினருக்கும் அவரவர் துறை முன்னேற்றத்திற்குச் சட்டம் ஏற்படுத்திச் செங்கோல் ஆட்சி செய்து தர்மம் காத்துவருவதில் இறைவன் கட்டளையை நிறைவேற்றுவார்கள். பரந்த நோக்குடைய மாட்சிமைதங்கிய உத்தம நல்லோர்களின் ஆட்சியால் லோகத்தில் அறநிலையங்கள்,தேவாலயங்கள், சமய நெறிவளர்க்கும் மடாலயங்கள் ஆகிய லோகோபகார ஸ்தாபனங்கள் என்றும் சிறப்பாக இயங்க நல்லன ஏற்படும்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் தெய்வீகமான திருத்தோற்றத்தில் சிவப்பிரகாசமாக விளங்குகின்ற சிவஞான குருமகான்கள் லோகத்திற்கு அருள்கூர்ந்து எடுத்தியம்புகின்ற ஞான உரைகளினால் லோகமக்கள் அனைவரும் சிவஞான அறிவுடன் மேன்மை ஸ்திதியில் விளங்குவர். தேசங்களில் ஏற்படும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள், விசேஷ பூசைகள், உற்சவங்கள் சிறப்பாக நடைபெற்றுவரும். உலகெங்கும் ஆங்காங்கு ஆஸ்திக நெறியாளர்கள், சிவாசாரியர்கள், சிவசமய பிரசாரகர்கள் லோக நலன்களுக்குச் சிவாசாரத்தைப் பரப்பிவருவார்கள். லோக மக்கள் ஆஸ்திகவழிபற்றி உயர்வடைவார்கள். சர்வேஸ்வரனுடைய

அருளால் சகலமான பிரஜைகளும் உணவு, உடை, வாசஸ்தல சௌகரியம், வாழ்க்கை வசதிகள்பலவும் உடையவர்களாகி க்ஷேம கரமாக இனிது வாழ்க்கை நடத்துவார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை ¼**

( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும். தேக சௌக்கியம் நன்ருக இருந்துவரும். சகோதரருக்கு சந்தானபிராப்தி ஏற்படும். வித்துவத்துவத்தில் புகழ் ஏற்படும். உத்தியோகத்தில் உயர்ந்த நிலைமையை ஏற்படுத்தும். வீடுவாகன பிராப்தியில் மேன்மை ஸ்திதி யாக இருந்துவரும். பூமி இயந்திரங்களில் விருத்தியாக இருந்துவரும். பாட்டனின் உடல்நலம் பாதிக்கும். தாம்பத்திய வாழ்கை நன்ருக நடந்துவரும். கார்த்திகைமீ 13உ 18 நாழிகை 58 விடிைமுதல் 15உ 29 நாழிகை 6 விடிை வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**2. ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி – மிருகசீர்ஷம் ½**

( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் மதிப்பாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் நன்ருகஇருந்துவரும். வித்துவத்துவம் கலைத்துறையில் நற்பலன் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். பூமியில் விருத்தி நிலைமையாக இருந்துவரும். இயந்திர சாதனங்களில் நன்மைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். வீடுபழுதானவை சீர்படும். கால்நடை ஜீவனில் முடக்கம் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சௌகரியங்களை அளித்து வரும். கார்த்திகைமீ 15உ 29 நாழிகை 6 விடிை முதல் 17உ 35 நாழிகை 57 விடிை வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை – புனர்பூசம் ¾**

( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தனுதி சௌக்கியங்கள் மேலாக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத் துறையில் முன்னேற்றம் ஏற்படும். பூமி, இயந்திர சாதனங்களில் நற்பலன் வந்துசேரும். புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். 1உக்கு மேல் தாம்பத்திய வாழ்க்கையில் ஓர்பிணக்கு சம்ப வம்வந்து பின் சரிபடும். வழக்கு விவகாரங்களில் ஜெய பிராப்தியாக

இருந்துவரும். கார்த்திகைமீ 17உ 35 நாழிகை 57 வினடி முதல் 19உ 41 நாழிகை 48 வினடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வரவு செலவுகள் சரிசமனுக இருந்துவரும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். வீடு வாகனசௌகரியம் மேலாக இருந்துவரும். பூமி இயந்திரங்களில் 1வேக்கு மேல் விருத்தி பலன் காணும். விவகாரம் ஜெயிக்கும். புத்திரர்நலம் நன்ருக இருந்து வரும். தெய்வ அனுக்கிரகத்தினுல் சகல நன்மைகளும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய வெறுப் புணர்வு நீங்கிச் சௌகரியங்களை அளித்துவரும். கார்த்திகைமீ 19உ 41 நாழிகை 48 விளுடிமுதல் 21உ 48 நாழிகை 58 விளுடிவரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் ¼**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். தனதிபதி புதன் நிலைமையால் தனதானிய சம்பத்துக்கள் பெருகிவரும். சகோதரர் சகோதரிகளின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வீட்டு சௌகரியத் தில் நூதன வஸ்துக்களின் அனுபோக பிராப்தி ஏற்படும். புத்திரர் பௌத்திரர்களால் மனமகிழ்ச்சி ஏற்படும். இல்லத்தில் சுப விசேஷம் நடக்கும். தாம்பத்திய வாழ்வில் மகிழ்ச்சி நிலவும். கார்த்திகை மாதம் 21-ஆம் தேதி 48 நாழிகை 52 விளுடி முதல் 23-ஆம் தேதி 59 நாழிகை 11 விளுடிவரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½**

( டோ. பா. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தி யில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரர்களின் விசுவாசம் ஒத்துழைப்பு பலம் இருந்துவரும். வீடு வாகனுதிகளின் சௌகரியங்களில் நல்லநிலைமையாக இருந்துவரும். புத்திரர் சம்பந்த மான சஞ்சலம் இருப்பினும் அவர்களின் முன்னேற்றத்திற்கான ஆதாரம் இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். 1வே அளவில் ஜீவனேபாயத்தில் நன்மை ஏற்படும். கார்த்திகை மாதம் 23உ 59 நாழிகை 11 விளுடிமுதல் 26ஆம்தேதி 15 நாழிகை 5 விளுடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾**

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தீ தா. தே.)

துலாராசி 9 பாதங்களும் சுப பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கணிசமாக வரவாகிக்கொண்டிருக்கும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வித்தியா வியாபாராதிகளில் நற் பலன் உண்டாகும். வீடு வாகனுதிகளின் சௌகரியம் மேலாக இருந்துவரும். அரசாங்க நன்மைகள் ஏற்படும். புத்திரர் பௌத்திரர் களின் நலம் நன்ருக இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். கார்த்திகைமீ 26-ஆம் தேதி 15 நாழிகை 5 விஞடிமுதல் 28-ஆம் தேதி 37 நாழிகை 8 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் – கேட்டை.**

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் நல்லவிதமாக வந்துகொண் டிருக்கும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். 1வேக்கு மேல் அவசர வார்த்தைகளிஞல் சர்ச்சை ஏற்படுவதும் மனக் கஷ்டமும் ஆகும். மணவழியில் அல்லது டாம்பீகமான செலவுகள் ஏற்படும். இவை குல நல வைராக்கியமானதாகவும் சுபச் செலவாகவும் இருந்து வரும். தாம்பத்திய வாழ்க்கை சுமுகமாக நடந்துவரும். தேகம் உஷ்ணுதிக்கமாக இருந்துவரும். கார்த்திகை மாதம் 1, 2, 3 தேதி களும் 29-ஆம் தேதியும் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுப மாகும்.

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் ¼**

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர் ராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் கௌரவமாக வந்துகொண் டிருக்கும். கௌரவ செலவுகள் மிகும். வித்துவத்துவம் கலைத்துறை களில் எழுத்துமூல லேவாதேவிகளில் பிரசித்தமாக இருந்துவரும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். வாகன சௌகரியம் நன்ருக இருந்துவரும். சிரசில் இடித்துக்கொள்வதால் சிறுகாயம் ஏற்பட்டுக் குணமாகும். புத்திரர் பௌத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். கார்த்திகை மாதம் 3-ஆம் தேதி 46 நாழிகை 40 விஞடி முதல் 6-ஆம் தேதி 15 நாழிகை 55 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.






## 10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் நல்ல பணவருமானங்களை ஏற்படுத்திவரும். 16 தேதிக்கு மேல் பூமி பிராப்தியில் பரிவர்த்தனைக்கான பிரச்சினை ஏற்படும். சகோதரர் சம்பந்தமாக ஓர் செலவு ஏற்படும். வித்துவத்துவம் கலைத் துறையில் ஆதாயம் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். புத்திரர் புத்திரி களுக்கு சௌக்கியபலன் தரும். தாம்பத்திய வாழ்வில் சந்துஷ்டியான நிலைமையாக இருந்துவரும். ஜீவனேபாயத்தில் பிறரால் அல்லல் தோன்றினும் ஆதாயம் இருந்துவரும். கார்த்திகைமாதம் 6-ம் தேதி 15 நாழிகை 55 விநாடி முதல் 8-ஆம் தேதி 42 நாழிகை 32 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

## 11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் சுப பலன் தரும். குடும்பாபிவிருத்தி யில் பண வருமானங்கள் கணிசமாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். வீடு வாகனங்களின் பிராப்தி யில் நல்ல சௌகரியங்களை ஏற்படுத்திவரும். புத்திரனுக்குத் தொழில் துறையில் உயர்மாற்றம் ஏற்படும் வியாஜ்ஜிய வழக்குகளில் ஜெயம் ஏற்படும். அரசாங்க நன்மைகளை ஏற்படுத்திவரும். தாம்பத்திய வாழ்வில் வெறுப்புணர்வு தோற்றினும் சுக சௌகரியம் மேலாக இருந்துவரும். கார்த்திகை மாதம் 8-ஆம் தேதி 42 நாழிகை 32 விஞடி முதல் 11-ஆம்தேதி 3 நாழிகை 46 விஞடிவரையில் சந்திராஷ்டமம். சந்திராஷ்டமம் நீங்கிய ஞாயிறு திங்கள் சுபமாகும்.

## 12. மீனம் :- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். தந்தையின் உடல் நலம் பாதிக்கினும் குருவின்பார்வையால் உடன் சௌகரியமாகும். வீடு வாகனங்களின் பிராப்தியில் நல்லநிலைமையாக இருந்துவரும். புத்திரர் பௌத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மனைவியின் தேக நலம் நன்ருக இருந்துவரும். கார்த்திகை மாதம் 11-ஆம் தேதி 34 நாழிகை 46 விஞடிமுதல் 13-ஆம் தேதி 18 நாழிகை 58 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

---

# கார்த்திகை மாதச் சிறப்பு நாட்கள்

17—11—78 முதல் 15—12—78 முடிய

17—11—78 வெள்ளி, முடவன் முழுக்கு. திருவையாறு மாதப் பிறப்பு தீர்த்தம்.

19—11—78 ஞாயிறு, குத்தாலம், பறியலூர். கருங்குயில்நாதன் பேட்டை பானுவாரத் தீர்த்தம். இவ்வாறு நான்கு ஞாயிற்றுக்கிழமைகளிலும் நடைபெறும்.

20—11—78 திங்கள். திருக்கடவூர் 1008 சங்காபிஷேகம். இவ்வாறு நான்கு சோமவாரங்களிலும் நடைபெறும்.

23—11—78 வியாழன், கால பைரவாஷ்டமி. திருவையாற்றில் தீர்த்தம். ஸ்ரீ ஆட்கொண்டார் அபிஷேகம். வடைமாலைக் காட்சி.

25—11—78 சனி, மெய்ப்பொருள் நாயனார் குருபூசை.

26—11—78 ஞாயிறு, ஆனாய நாயனார் குருபூசை.

27—11—78 திங்கள், பிரதோஷம்.

28—11—78 செவ்வாய், மாத சிவராத்திரி.

29—11—78 புதன், போதாயன அமாவாசை.

30—11—78 வியாழன், சர்வ அமாவாசை.

2—12—78 சனி, மூர்க்க நாயனார் குருபூசை.

3—12—78 ஞாயிறு, திருவண்ணாமலை தீப உற்சவ ஆரம்பம். சிறப்புலி நாயனார் குருபூசை.

10—12—78 ஞாயிறு, 8 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிகபரமாசாரிய சுவாமிகள்குருபூசை

11—12—78 திங்கள், பரணிதீபம், பிரதோஷம், தருமபுரம் ஸ்ரீ ஞானபுரீசுவரருக்கும், ஸ்ரீ தருமபுரீசுவரருக்கும் 108 சங்காபிஷேகம். 16 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூசை

12—12—78 செவ்வாய். கிருத்திகை விரதம், அண்ணாமலை தீபம். வேளூர், தருமை ஸ்ரீசண்முகர் கிருத்திகை. திருக்கடவூர் முனீசுவர பூசை. கணம்புல்ல நாயனார் குருபூசை.

13—12—78 புதன், சர்வாலய தீபம். வைகானச தீபம்.

14—12—78 வியாழன் பௌர்ணமி விரதபூசை. பாஞ்சராத்ர தீபம். மாயூரம் - வள்ளலார்கோயில் ஸ்ரீ மேதாதட்சிணாமூர்த்திக்கு விசேஷ அபிஷேக ஆராதனை. 18 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூசை.

15—12—78 வெள்ளி, குத்தாலத்தில் அபிஷேகம், கடைவெள்ளி ஸ்தலவிருட்ச பூசை.

குன்றக்குடியில்

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி குருபூஜை விழா

குன்றக்குடி, தருமைக் கயிலைக் குருமணி உயர்நிலைப் பள்ளியின் சபாபதி முனிவர் கலையரங்கத்தில் (24—10—78) மாலை 4 மணி அளவில் தருமபுரம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் ஏழாவது ஆண்டுக் குருபூசைத் திருநாள் குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

கயிலைக் குருமணி அவர்களின் திருவுருவப்படம், அலங்கரிக்கப் பெற்ற பூப்பந்தலில் பொலிவுற எழுந்தருளச் செய்யப்பெற்று, சிறப்பு வழிபாடு நடத்தப்பெற்றது வழிபாட்டைத் தொடர்ந்து வந்திருந்த பெரியோர்கள், உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவியர், ஸ்ரீ தெய்வசிகாமணி அருள்நெறித் தொடக்கப்பள்ளி மாணவ மாணவியர் அனைவராலும் சிவபுராணம் கனிவுடன் ஓதப்பெற்றது.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கயிலைக் குருமணி அவர்களின் பண்புநலன்களையும், பணிகளையும் சிறப்பித்து அருளுரை ஆற்றினார்கள். அனைவர்க்கும் பிரசாதம் வழங்கப்பெற்றது.

தருமையாதீன தேவஸ்தானங்களில்

## கந்த சஷ்டி விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருப்புள்ளிருக்குவேளூர் என்னும் வைத்தீசுவரன்கோயிலில் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கும், மாயூரம் - குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கும் 1—11—78 புதன்கிழமை முதல் கந்தசஷ்டி விழா தொடங்கி சிறப்பாக நடைபெற்றது இவ்விழாவை முன்னிட்டுத் தேவஸ்தானங்களில் ஆங்காங்கு நாடோறும் கந்தபுராண விரிவுரையும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது! மாயூரம் குமரக்கட்டளையில் அ.வ.அ. கல்லூரித் துணைப்பேராசிரியர் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன், எம். ஏ., பிஎச். டி., வைத்தீசுவரன்கோயிலில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான். திரு. கா. ம. கண்ணப்பன், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரர் கோயிலில் வித்துவான். திரு. சுவர்ணகாளீசுவரன், தருமையாதீனத் திருமடத்தில் வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. ஆகியோர் நாடோறும் மாலை 7 மணி முதல் கந்தபுராண விரிவுரை நிகழ்த்தினார்கள்.

Printed & Published by V. Ramaiah Pillai Manager Dharmapuram Adhinam, at the Gnanasambandam Press Dharmapuram Mayuram. 10—11—78.